# அமுதக் கதைகள்

(துணைப்பாட நூல்)

[ஆறும் வகுப்புக்குரியது]

ஆசிரியர் :

வித்துவான் க. முத்துலட்சுமி

வசந்தம் பப்ளிஷர்ஸ்

4, பாண்டி பஜார்,

தி. நகர் : சென்னை - 17.

## முன்னுரை

அமுதக் கதைகள் என்னும் இந்நூல் ஆறும் வகுப்புத் துணைப் பாடத்துக்கென அமைந்த தொன்றாகும். அரசியலார் வெளியிட்டுள்ள பாடத் திட்டத்துக்கு ஏற்ப எழுதப் பட்டுள்ளது.

பாடத் திட்டத்தில் குறிப்பிட்டுள்ளபடி சங்ககாலக் கதைகள், அறிவியல் கண்டுபிடிப்புக்கள், நுண்ணறிவுக் கதைகள் ஆகியவை இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

இந்நூலின் ஆசிரியர் தம் நிறைந்த அனுபவத்தையொட்டி மாணவர்களின் தேர்ச்சி நிலைக்கு ஏற்ற வகையில் இந்நூலை எளிய செந்தமிழ் நடையில் எழுதியுள்ளார்.

மாணவர் படித்தறிந்தவற்றைத் தேர்ந்தறிய இந்நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ள பயிற்சி வினாக்கள் பெரிதும் பயன்படும்.

இந்நூலின் மூலமாக ஆறும் வகுப்பு மாணவர் மொழியறிவில் தகுந்த தேர்ச்சி நிலையை எளிதாக எய்துவர் என்றும், பொது அறிவுத் திறன் சிறப்பாகப் பெறுவர் என்றும் உறுதியாக நம்புகிறோம்.

பதிப்பகத்தார்.

# பொருளடக்கம்

# 1. வள்ளல் குமணன்

நீர் வளமும் நிலவளமும் மிகுந்த சோழ நாட்டில் 'ஆவூர்' என்னும் ஓர் ஊர் உண்டு. முற்காலத்தில் 'மூலங்கிழார்' என்பவர் ஒருவர் அவ்வூரில் வாழ்ந்து வந்தார். அவர் கல்வியறிவுடையவர்; கவி பாடும் திறமையும் உடையவர். அவர் தம் மனைவியாருடன் இனிதே இல்லறம் நடத்தி வந்தார். நெடுநாட்கள் அவர்கள் பிள்ளைப் பேறு இன்றி வருந்தினர். பிறகு இறைவன் திருவருளால் அவர்களுக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. பெற்றோர் அம் மகவிற்குப் 'பெருந் தலைச் சாத்தன்' என்று பெயரிட்டனர். பெற்றோர் தம் ஒரே குழந்தையைத் தம் உயிரினும் மேலாக மதித்து வளர்த்தனர்.

பெருந்தலைச் சாத்தனார் ஐந்து வயதுடைய சிறுவரானார். மூலங்கிழார் தம் மைந்தருக்குத் தாமே கல்வி கற்பித்தார். சாத்தனார் தம் இளமைப் பருவத்திலேயே தமிழ் இலக்கண நூல்களையும், இலக்கிய நூல்களையும் படித்தார்; தெளிவான தமிழறிவைப் பெற்று விளங்கினார். அவர் கவிபாடும் திறமையையும் உடையவராய்த் திகழ்ந்தார்.

மூலங்கிழார் தம் அருமை மைந்தருக்குத் திருமணம் செய்து முடித்தார். சில ஆண்டுகளுக்குப் பின்பு பெருந்தலைச் சாத்தனார் தம் பெற்றோரை இழந்தார். சாத்தனார் தாமே முயன்று பொருள் தேட வேண்டியவரானார். அவருடைய மனைவியார் இல்லறத்திற்கேற்ற சிறந்த பண்புகள் நிறையப் பெற்றவர். தம் கணவருக்குக் கிடைக்கின்ற பொருளை வைத்துக் கொண்டு சிக்கனமாகச் செலவு செய்து குடும்பத்தை நடத்தினார்.

புலவரும் அவருடைய மனைவியாரும் வறுமையிற் செம்மையுடையவராய் வாழ்ந்து வந்தனர். அவர்களுக்குக் குழந்தைகளும் இருந்தன. தமக்குக் கிடைக்கின்ற பொருளைக் கொண்டு தம்மால் இயன்ற வரை பிறருக்கும் உதவி செய்வது அவர்களுடைய பண்பு. இவ்வாறு வாழ்ந்துவந்த பெருந்தலைச் சாத்தனாரின் குடும்பத்தில் பொருட் செல்வம் குறைந்தது. வறுமைத் துன்பம் அவர்களை வாட்டியது. புலவரும், அவர் மனைவி மக்களும் பல நாட்கள் பட்டினியால் வருந்தினர். குழந்தைகள் உண்பதற்கு உணவின்றித் தம் தாய்முகம் நோக்கின. தாய் தன் கணவன் முகம் நோக்கினாள். புலவர் என்ன செய்வார், பாவம்! அவர் மிகவும் வருந்தினார்.

பெருந்தலைச் சாத்தனார் ஒருநாள் தம் ஊரை விட்டுப் புறப்பட்டார். தம் மனம் சென்றவாறு நடந்து சென்றார். அவ்வாறு செல்லும்பொழுது தம் எதிரே புலவர் ஒருவரை அவர் கண்டார். அப்

புலவர் யானை மீதமர்ந்து பல மூட்டைகளுடன் காட்சி யளித்தார். சாத்தனர் அவரை வணங்கினர். யானை மீதிருந்த புலவர் கீழே இறங்கிவந்து சாத்தனரை மார்புறத் தழுவிக்கொண்டார்; "புலவரே யான் கொங்கு நாட்டு மன்னன் குமணனைப் பாடிப் பரிசில் பெற்று வருகின்றேன்; அப்பெருமகன் புலவரை ஆதரிப்பதில் சிறந்தவன்; நீர் அவனிடம் சென்றால் உம்முடைய வறுமையையும் போக்குவான்," என்று கூறினர். சாத்தனர் அப்புலவருக்கு நன்றி கூறி அவரிடம் விடை பெற்றுக் கொங்கு நாடு நோக்கி நடந்தார்.

கொங்கு நாட்டில் முதிரமலை என்றொரு மலை யுண்டு. அம் மலையைச் சூழ்ந்த நாட்டைக் குமணன் என்பவன் ஆண்டு வந்தான். அவன் தன் தாய் மொழியின் மீது அளவு கடந்த பற்றுடையவன். தமிழ்ப் புலவர்களைத் தெய்வமாகப் போற்றும் அருங் குணமுடையவன். தமிழ்ப் புலவர்கள் பலர் அவனிடஞ் சென்று ஏராளமான பொன்னையும், பொருளையும், யானைகளையும் பரிசில்களாகப்பெற்ற னர். அவ்வாறு பரிசில் பெற்ற புலவர்களில் பெருஞ் சித்திரனர் என்பவரும் ஒருவர். அவரே பெருந் தலைச் சாத்தனரைக் கண்டு, அவரைக் குமணனிடம் செல்லுமாறு கூறியவர். குமணன் புரிந்த அளவற்ற அறச் செயல்கள் அவனுக்குச் சிறந்த புகழையும் சிறப்பையும் உண்டாக்கின. குமணனின் பெருமை நாடு முழுவதும் பரவியது; அனைவரும் அவனைப் போற்றினர்.

குமணனுக்கு இளங்குமணன் என்ெருரு தம்பி இருந்தான். அவன் நல்லவர் நட்பில்லாதவன்; தீயோரைச் சார்ந்து வாழ்ந்தான். அதனல் அவன் தீய குணமுடையவனய் விளங்கினன். தன் தமையன் புலவர் பெருமக்களுக்கும், பாணர்க்கும், கூத்தர்க்கும் செல்வத்தை வாரி வாரி வழங்குவதை இளங்குமணன் வெறுத்தான். அரண்மனைச் செல்வம் நாளாக நாளாகக் குறைந்து வருவதைக் கண்ட அவன் மனம் பொறுமை யிழந்தது. எனவே, தன் அண்ணனைக் கொல்லத் துணிந்தான்.

தன் தம்பியின் உள்ளக் கருத்தைக் குமணன் எவ்வாரே அறிந்து கொண்டான். ஒரு நாள் இரவு எவரும் அறியாவண்ணம் குமணன் தன் அரசைத் துறந்து காட்டிற்குச் சென்ருன். குமணன் சென்ற இடம் இளங் குமணனுக்குத் தெரியவில்லை. உடனே இளங்குமணன் அரசனனன். தன் தீய நண்பரைத் தனக்கு அமைச்சராக அமர்த்திக் கொண்டான். குமணன் எங்குச் சென்ருன் என்பது அவனுடைய உண்மை நண்பர்களுக்கு மட்டுமே தெரியும். குமணன் பகற் பொழுதைக் காடுகளிலும், இரவு நேரத்தை மலைக் குகைகளிலுமாகக் கழித்து வந்தான். தன்னை நாடி வந்தவர்களுக்கெல்லாம் வாரி வாரி வழங்கிய வள்ளல் குமணன், உண்பதற்கும் ஏற்ற உணவின்றி இன்னல் அடைந்தான். இவ்வாறு நாட்கள் பல கழிந்தன.

குமணனைக் கண்டு பரிசில் பெற எண்ணிப் புறப்பட்ட பெருந்தலைச் சாத்தனர் கொங்கு நாட்டை

யடைந்தார். அரண்மனைக்குச் சென்று குமணன் அங்கு இல்லை யென்பதை உணர்ந்தார். இளங் குமணன் அரசனாக இருப்பதையும் அறிந்தார். குமணனுக்கும் அவன் இளவல் இளங்குமணனுக்கும் ஏற்பட்ட மனக் கசப்பினை ஒருவாறு உணர்ந்தார். இளங்குமணனைக் காண மனமின்றி அரண்மனையை விட்டு வெளியே வந்தார். முதியவர் ஒருவரைக் கண்டு குமணன் இருக்குமிடத்தை யறிந்து அவனைக் காண வெகு வேகமாகப் புறப்பட்டார்.

சாத்தனார் கல்லும் முள்ளும் நிறைந்த வழிகளைக் கடந்து வந்து கடைசியில் குமணன் உறைந்து வந்த கானகத்தை யடைந்தார். அக் கானகத்தில் பல இடங் களில் அலைந்து திரிந்தார். இறுதியில் குமண வள்ளலைக் கண்டார். சாத்தனார் வருவதைக் கண்ட குமணன் அவர் ஒரு புலவராய் இருக்கக் கூடும் என்று எண்ணினான். புலவர், குமணனை நெருங்கியதும் கை குவித்து வணங்கினார். குமணனும் புலவரை அகமிக மகிழ்ந்து முகமலர்ச்சியுடன் வரவேற்றான். இரு வரும் ஓரிடத்தில் அமர்ந்தனர்.

குமணன் புலவரை நோக்கிப் "புலவரே! அரும் பாடுபட்டு அடியேனைக் காண இங்கு வருகை புரிந்த நும் வரவு நல்வரவாகுக; தாங்கள் யார்? என்னைத் தேடி வந்ததன் நோக்கத்தினை நான் அறியலாமோ?", என்று கேட்டான். அது கேட்ட புலவர் "மன்னரே! நான் சோழ நாட்டில் பிறந்தவன்; என் பெயர் பெருந்தலைச் சாத்தனார். வறுமைப் பேய் என்னைப்

பிடித்துக் கொண்டது. எனக்கு மனைவியும் மக்களும் உள்ளனர். என் வீட்டில் அடுப்பு மூட்டிப் பல நாட்களாகின்றன. ஆதலால் அடுப்பில் காளான் பூத்துக் கிடக்கின்றது. என் மனைவியின் உடல் மெலிந்து விட்டது. குழந்தைகட்கும் உணவில்லை. என் குழந்தை ஒரு நாள் தாய் முகம் நோக்கி அழுதது; தாய் என் முகம் நோக்கி யழுதாள். நான் நின் முகம் நோக்கி ஓடி வந்தேன். நீயோ ஆட்சியை விட்டு விட்டுக் காட்டில் வந்து துன்பப்படுகிறாய். நான் உன்னுடைய துன்ப நிலையைப் பார்த்து வருந்துகின்றேன்," என்று கூறினார்.

குமணன் புலவருடைய நிலையைக் கேட்டுக் கண்ணீர் சொரிந்தான். புலவருக்குத் தான் ஒன்றும் கொடுக்க முடியாத நிலையில் இருப்பதை எண்ணி நாணமடைந்தான். "இல்லையென வந்தவர்களுக்கு இல்லை யென்னாது ஈகை புரிந்த வள்ளல் தன்மை குன்றி விட்டதே," என எண்ணிப் பெருந்துன்பங் கொண்டான். புலவரை வெறுங்கையுடன் அனுப்ப மனமில்லாத குமணன் எழுந்து எதையோ யோசித்துக் கொண்டு உலாவினான். அவன் முகம் திடீரென மலர்ந்தது. அவ்வள்ளல் புலவர் பெருமானை நோக்கிப் பின்வருமாறு கூறினான். "புலவர் பெருமானே! நான் மன்னனாயிருந்த காலத்தில் நீர் வந்திருந்தால் உம்முடைய வறுமையைப் போக்கி யிருப்பேன். இந்தத் துன்பநிலையில் நீர் என்னைக் காண வந்துள்ளீர். இருப்பினும் உமக்கு என்னால் இயன்றதைக் கொடுக்கின்றேன். நீர் தடையின்றி

ஏற்றுக் கொள்ளவேண்டும். என் அருமைத் தம்பி இளங்குமணன் என் தலையைக் கொண்டு வருபவர்க்குப் பெரும்பொருள் கொடுப்பதாக அறிவித்துள்ளதாகக் கேள்விப்பட்டேன். நீர் என் தலையை அரிந்து எடுத்துச் சென்று அவனிடம் காட்டும். அவன் உமக்குப் பெரும் பொருள் தருவான். உம்முடைய வறுமையும் உம்மை விட்டு நீங்கும்,'' என்று கூறிக்கொண்டே தன்னுடைய வாளைப் புலவர் கையில் கொடுத்தான்.

குமணன் கூறியவற்றைக் கேட்ட புலவர் மனம் திடுக்கிட்டது. குமணனுடைய தன்னலங் கருதாத் தன்மையையும் பிறர்க்கு ஈயும் பண்பையும் எண்ணிக் கண்ணீர் விட்டார். அப்போது அவருக்கு யோசனை ஒன்று தோன்றியது. மன்னன் கொடுத்த வாளினைத் தம் கையிலேந்திக் கொண்டு நகரை நோக்கி ஓடினர். அவர் ஓடுவதைக் கண்டு குமணன் செய்வதறியாமல் நின்றான்.

குமணன் கொடுத்த வாளுடன் புலவர் அரண்மனையை அடைந்தார். இளங்குமணனைக் கண்டு வணங்கினர். கரங்களில் வாளேந்தி நிற்கும் புலவரின் தோற்றத்தைக் கண்டு இளங்குமணன் ஒன்றும் புரியாமல் விழித்தான். புலவர் அவனைப் பார்த்துப் பின் வருமாறு கூறினர்.

"மன்னவா! நான் சோழ நாட்டுப் புலவன்; நின் அண்ணன் குமண வள்ளலைக் கண்டு பரிசில் பெற வந்தேன். அவன் கானகத்திலிருப்பதை அறிந்தேன்.

கானகம் சென்று பல இடங்களில் சுற்றி அலைந்து இறுதியில் கண்டேன். என்னுடைய ஏழ்மை நிலையை அவனிடம் கூறினேன். முடியிழந்து காட்டில் மறைந்து வாழ்கின்ற துன்ப நிலையிலும் அவன் உள்ளத்தில் இரக்க உணர்ச்சி மறையவில்லை. அப் பெருமான் இவ்வாளை என் கையில் கொடுத்தான். 'என் தலையை அரிந்து வருபவர்க்கு அளவு கடந்த பொன் அளிப்பதாக என் அருமைத் தம்பி வாக் களித்துள்ளான்; ஆதலால் நீர் 'என் தலையை வெட்டி யெடுத்துச் சென்று என் இளவலிடம் காட்டும்' என்று உளமகிழ்ந்து உரைத்தான். மனித உணர்ச்சி யுடைய எவன் தான் அப்பெருமகனைக் கொல்வான்? நான் அவன் தந்த வாளுடன் உன்னைக் காண வந்தேன். மன்னவா! உன் தமையன் இப் பெரு நிலம் போற்றும் பெரு வள்ளல். எம் போன்றவருக் குத் துணை புரியும் ஈகைக் குணம் மிக்கவன்; குடி மக்களின் துயர் துடைக்குங் கொற்றவன்; அவன் இன்னும் பல்லாண்டுகள் உயிரோடிருப்பின் நாடு நலம் பெறும். எளியவர்களின் வாழ்வும் ஏற்றம் பெறும். நீ அவனுக்குத் தம்பி; உன்னிடமும் நற்பண்புகள் குடி கொண்டிருக்குமென்று நம்புகின் றேன். அப்பெருமகனை அழைத்து வந்து பழையபடி ஆட்சியை ஒப்படைப்பதே சாலச் சிறந்தது. அதுவே உன் கடமையுமாகும். ஐயனே! நல்லவன் நாட்டில் வாழ்வதா? காட்டில் வாழ்வதா? அறிவிற் சிறந்த உனக்கு நான் மேலும் கூறுவது முறையன்று." இவ் வாறு புலவர் கல்மனமும் கரையப் பேசி முடித்தார்.

இளங்குமணன், புலவரின் இன்னுரையைக் கேட்டான். தலையைக் கொடுக்கத் துணிந்த தமையனின் உள்ளத்தை யறிந்தான். அவன் மனம் மாறியது. அவன் உள்ளத்தில் பதிந்திருந்த பொறாமையும், வஞ்சகமும் ஆதவன் முன் பனிபோல் நீங்கிற்று. தன் அண்ணனை உடனே காணவேண்டுமென இளங்குமணன் எண்ணினன். புலவரை வாழ்த்தினன். அவன் சாத்தனருடன் காட்டுக்கு விரைந்து சென்றான். பல இடங்களிலும் அலைந்து திரிந்தான். இக்கொடிய கானகத்தில் தன் அருமை அண்ணனை மறைந்து வாழச் செய்து விட்டோமே யென்று உள்ளம் வருந்தினன். புலவரின் உதவியால் தன் தமையனைக் கண்டான். அவன் அடிகளில் வீழ்ந்து கதறியழுதான். தான் செய்த குற்றத்தைப் பொறுத்தருளும்படி வேண்டினன். மனம் திருந்திய தன் தம்பியைக் கண்டதும், குமணனும் கண்ணீர் சிந்தி அவனைத் தன் மார்போடு தழுவிக்கொண்டான். அக் காட்சியைக் கண்ட புலவர் அளவு கடந்த மகிழ்ச்சி யடைந்தார். உடன்பிறந்தாரிருவரும் ஒற்றுமையுடன் உடன்பாடு கொண்டது கண்டு உவகைக் கடலில் மூழ்கினர்.

இளங்குமணன் தன் அண்ணனைக் கொங்கு நாட்டிற்குப் பழையபடி மன்னனாகும்படி வேண்டினன். அவன் அன்று முதல் குமணனுக்கு உதவியாயிருந்து அரசியல் அலுவல்களைக் கவனித்தான். மீண்டும் குமணன் மன்னனான செய்தி யறிந்த நாட்டு மக்களனைவரும் மனம் மகிழ்ந்தனர். குமணனையும்

இளங்குமணனையும் வாழ்த்தினர். புலவர் சின்னாட்கள் அவருடன் தங்கியிருந்தார். குமணன் புலவருக்குப் பெருஞ் செல்வத்தைப் பரிசாக வழங்கினன். புலவர் குமணன் ஈந்த யானை மீதமர்ந்து தம் நாடு நோக்கிச் சென்றார். வறுமைக் கடலில் மூழ்கி வருத்தமடைந் திருந்த தம் குடும்பத்தினரும், சுற்றத்தினரும் இன்ப வாழ்க்கை வாழப் புலவர் வழி செய்தார். தம் வறுமை யைப் போக்கிய குமணனை உளமார வாழ்த்தினார். தம் அறிவுரையை ஏற்றுக்கொண்டு, மீண்டும் தம் அண்ணனை மன்னனாக்கிய இளங் குமணனையும் வாழ்த்தினார். புலவரின் அறிவுத் திறமையால் கொங்கு நாடு மீண்டும் குமணனை மன்னனாகப் பெற்றது.

---

## 2. கரடியுடன் போர்

வெற்றி வேலனும் மதியழகனும் இளமையி லிருந்தே நண்பர்களாக விளங்கினர். கல்வி நலம் வாய்ந்த இருவரும் தங்கள் வாழ்க்கையைச் சீர்பெற நடத்துவதற்கு வேறு வேறு தொழிலை மேற்கொண் டனர். வெற்றி வேலன் வீரம் மிக்கவன்; நல்ல எடுப் பான தோற்றம் உடையவன். எனவே, நாட்டுப் படையில் சேர்ந்தான். பொறுப்புள்ள பதவியும் அவனுக்குக் கிடைத்தது. மதியழகன் தன் பெயருக் கேற்ப நுண்ணறிவு படைத்தவன்; ஆழ்ந்து சிந்தித்து எச்செயலையும் செய்வான். அவனிடம் அறிவினால் ஏற்பட்ட அமைதி காணப்பெற்றது.

இவ்விரு நண்பர்களும் ஒருநாள் தங்கள் சிற்றூருக்கடுத்த காட்டு வழியாக வேறோர் ஊருக்குச் செல்ல நேர்ந்தது. வெற்றி வேலன் நல்ல வில் ஒன்றை ஏந்திக் கொண்டான்; கூர்மையான அம்பு களையும் தேர்ந்தெடுத்துக் கொண்டான். மதியழகன் தன் கைக்குக் காவலாக இருக்கும்படி ஒரு கைக் கோடரியை எடுத்துக் கொண்டான். இருவரும் தம் பயணத்தைத் தொடங்கினர். காட்டு வழியே செல்லும்போது அவர்களுக்கு அச்சமாக இருந்தது. கொடிய விலங்குகள் திடீரெனத் தாக்க வந்துவிட் டால் என்ன செய்வது? ஆகவே, அவர்கள் அஞ்சி அஞ்சிச் சென்றனர்; நடக்கும் ஓசையும், சிறு சல சலப்பும் ஏற்படாதவாறு நடந்து சென்றனர்.

திடீரென்று வெற்றி வேலன், மதியழகனின் தோளை மெதுவாகத் தொட்டான்; "உஸ்," என்று எச்சரிக்கை செய்தான்; தன் வில்லில் அம்பை ஏற்றி வளைத்தான். மதியழகன் அச்சத்தால் தன் கோடரியை இறுகப் பிடித்துக் கொண்டான். அவன் உடல் சற்று நடுங்கியது. அருகில் புதர்களுக்கிடையே சருகுகளின் சலசலப்பு ஓசை கேட்டது. அதே வேளையில் வெற்றி வேலன் அம்பினை இழுத்து விட்டான். 'டிரிங்,' என்ற ஓசையுடன் அம்பு பாய்ந்து சென்றது. சற்று நேரம் அமைதி நிலவிற்று. "ஓடு, ஓடு, பாதையைப் பார். அது தாக்கப்பட்டது, தாக்கப்பட்டது," என்று உரத்த குரலில் வெற்றி வேலன் படபடப்புடன் கூறினான்.

மதியழகன் முன்பக்கமாகத் தாவிக் குதித்தான். அப்போது அடர்ந்த புதர்களுக் கிடையிலிருந்து கரடிக் குட்டி ஒன்று அவன் முன்னால் நேராகப் பாய்ந்தது. இடையிலே தன்னை எதிர்க்கத் துணிந்து நிற்கும் மனிதனைக் கண்டது. மிகுந்த சினங் கொண்டது. பின் கால்களை நிலத்தில் ஊன்றிக் கொண்டு பதுங்கிப் பின் வாங்கியது; பெருங் குரலெடுத்து உறுமியது. குகை போன்று தன் வாயைத் திறந்து கொண்டு சீறியது. கோரைப் பற்களையும், கூரிய நகங்களையும் தாக்குவதற்கெனக் காட்டிற்று. மதியழகன் மிகுந்த பரபரப்பு அடைந்தான். எதிரிலே தாக்கப்பட்ட கரடியின் சினத்தைக் கண்டு நடுங்கினான். எனினும், தன்னைக் காத்துக் கொள்ள வேண்டுமன்றோ? அவனுக்குத் துணிவு ஏற்பட்டது

தன் வலிமை யெல்லாம் கொண்டு கோடரியால் அதன் முகத்தின் மேல் தாக்கினன் ; ஒன்று, இரண்டு, மூன்று எனத் தொடர்ந்து அடித்தான். அவ்வடிகளைத் தாங்காது கரடியும் அலறியவாறே சுருண்டு சுருண்டு விழுந்தது. ஓரடி அதன் மூக்கின் மேல் பட்டது. மூக்கின்மீது பட்ட அடியால் அலறிய வாறே விழுந்தது. அதன் அலறல் முனகல் ஆக மாறிற்று. சற்று நேரத்தில் அதுவும் நின்று விட்டது. கரடிக் குட்டி மதியழகனின் கோடரிக்கு இரையாயிற்று.

"நண்பனே...! போதும்! மேலும் மேலும் அதனை அடிக்காதே, நீ அதன் இறைச்சியை வீணாக்கி விடுவாய் போலும்!", என்று சொன்ன படியே வெற்றி வேலன் அருகில் வந்தான். மதியழகன் பதில் ஒன்றும் சொல்லவில்லை. அவன் தனக்குப் பின்னல் புதர்களினிடையே கேட்கும் மெல்லிய அரவத்தைக் கவனித்துக் கொண்டிருந் தான். அவ்வொலி இதுவரையிலும் அவன் கேட்டறி யாதது. கனமான பொருள் ஒன்று மெல்ல மெல்லச் சருகுகளின்மீது நகர்ந்து வருவது போன்ற ஓசையை இருவரும் உற்றுக் கேட்டனர். ஆர்வத் தோடும், அச்சத்தோடும் அத்திசையில் அவர்கள் கண்டது மிகப் பெரிய கருமையான ஒரு விலங்கு. தலையைத் தரையில் தாழ்த்தி மோப்பம் பிடித்தவாறு அது வந்து கொண்டிருந்தது. அதோ! ஐந்து மீட்டர் தூரத்திற்குள் வந்துவிட்டது. மதியழகன் அதனை வெறித்துப் பார்த்தான். அவன் முகம் பயத்தினல்

வெளிறியது. உடல் நடுங்கிற்று. கால்களை எடுத்து வைக்கவும் முடியவில்லை. அவனையும் அறியாது அவன் வாய் அலறியது. "வேலா! வேலா!", என்று மதியழகன் உரக்கக் கூவினன். வேலன் சுற்றிப் பார்த்தான். அவன் கண்டது ஒரு பெரிய கரடி. பெரிய குதிரை அளவுள்ளது. அது தன் நகங்களால் தரையைச் சுரண்டிக் கொண்டே வந்தது. மோப்பம் பிடித்துக் கொண்டு அதனைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்தது. "தாய்க்கரடி" என்ருன் வேலன். அந்த ஒரு சொல் இருவர் உள்ளத்திலும் பேரச்சத்தைத் தந்தது. இருவரும் கண்களை இமைக்காது நின்றனர். கரடிக் குட்டியினைக் கொன்றதை நினைத்தனர். ஆம்; அதன் தாய்க் கரடிதான் இது! அதனைத் தேடி வருகிறது. சற்று நேரத்தில் பழி வாங்கிவிடும். இருவரும் தப்பிச்செல்ல முடியாது. கரடியால் கொல்லப்படுதலன்றி வேறு வழியில்லை என்ற முடிவுக்கு வந்தனர்.

அவர்கள் கணப்பொழுது தயங்கி நின்றனர். கரடியும் தலையைத் தூக்கியது. அதன் உடலிலுள்ள உரோமங்கள் அனைத்தும் சிலிர்த்துக் குத்திட்டு நின்றன. அதன் தோற்றம் முன்னிலும் இருமடங்காகத் தெரிந்தது. அது தன் தலையை உயர்த்தியது. கோரைப் பற்கள் தெரிய வாயைப் பிளந்தது. அதன் கண்களோ சினத்தால் நெருப்புப் போலக் காணப்பட்டன். பின்னங்கால்களால் நிலத்தைக் கீறியது. சருகுகள் சுழல் காற்றில் சிக்கியதைப்போலச்

சுழன்று எழுந்தன. அவர்களை நோக்கி அது விரைவாக நடக்கத் தொடங்கியது.

வெற்றிவேலன் கையிலிருந்த வில்லை வீசி எறிந்தான்; விரைந்து ஓடினன். அருகிலிருந்த மரம் ஒன்றில் ஏறத் தொடங்கினன். மதியழகனும் கூக்குரல் இட்டுக் கொண்டே பக்கத்திலிருந்த மரத்தின் மீது தொற்றிக் கொண்டான். கொடிய விலங்குகளைப்போல் இருவரும் உறுமினர்; அலறினர். கரடி இறந்து கிடந்த தன் குட்டியினைக் கண்டது; மோந்து பார்த்தது. இரத்தம் சிந்தியிருப்பதைக் கண்டது. தன் குட்டியைப் பிரிந்த துயரம் அதற்கு மேலும் சினத்தைத் தந்தது. இவ்வாறு சற்று நேரம் கரடி அங்கே நின்றது. அக்குட்டியைச் சுற்றிச் சுற்றி வந்தது. இந்நேரத்தை நண்பர்கள் நன்ருகப் பயன்படுத்திக் கொண்டனர். இல்லையெனில் இருவரில் ஒருவரேனும் அப்பெருங் கரடிக்கு இரையாகி இருப்பர்.

கரடி பெருங்குரலெடுத்து உறுமியது. அவ்வொலி இருவர் காதிலும் பட அவர்கள் உடலெல்லாம் நடுங்கின. திடீரென்று கரடி வெற்றிவேலன் பக்கம் திரும்பியது. அவன் ஏறிய மரத்தை ஓங்கி அறைந்தது. நல்ல வேளை அவன் அதன் கொடுமையான பிடியில் அகப்படவில்லை. மரத்தின் மீது விரைந்து ஏறிவிட்டான். கரடி மரத்தினடியில் வந்து நின்றது. பெருஞ் சினத்துடன் பற்களால் மரத்தின் பட்டையைப் .பிய்த்து எறிந்தது. தன் கால்களை மரத்தில் அழுத்தமாக ஊன்றிக்கொண்டு குரங்கு ஏறுவதுபோல மேலே ஏறிச் செல்லலாயிற்று.

வெற்றிவேலனின் பொல்லாத காலம். அவன் ஏறிய மரம் பட்டுபோனதொன்று; அதில் வெறுங் கிளைகளே உலர்ந்து நின்றன. உயரமும் அதிகம் இல்லை. இன்னும் சற்று நேரத்தில் கரடியும் அவனருகில் வந்துவிடும். அவன் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் பார்த்தான். அருகில் நிற்கும் மரக் கிளையொன்று தன் பக்கமாக வளைந்து காணப்படுமா என்று பார்த்தான். ஒன்றும் தென்படவில்லை. கீழே குதித்து விட்டாலோ? கரடியும் அவன் மீதே தாவி விடும். அவனை எளிதாக அடித்து நொறுக்கி விடும். வெற்றிவேலன் எதற்கும் அஞ்சாதவன்; எதிர்ப்பைக் கண்டு பின் வாங்காதவன். அவன் உடலில் சூடு ஏறிற்று. இரத்தம் கொதித்தது. அவன் கரடியைத் தாக்கத் துணிந்தான்.

"என் வேளை நெருங்கி விட்டது. நான் ஒரு வீரனாகவே என் முடிவை ஏற்கின்றேன்," என்று வேலன் துணிவு கொண்டான். பட்டுப்போய் நின்ற ஒரு சிறு கிளையைப் பற்றிக் கொண்டான். கீழிருந்து மெல்ல மெல்ல ஏறிவரும் கொடிய விலங்கும் அவனை நெருங்கிக் கொண்டிருந்தது. தன் இடுப்பிலிருந்த கூர்மையான சிறிய கத்தியொன்றை எடுத்தான்; பற்களால் உதடுகளைக் கடித்தான். கரடி கைக் கெட்டிய தூரத்தில் வருவதுதான் தாமதம். கத்தியால் குத்த முனைந்து நின்றான். கரடியின் உருவமோ மிகப் பெரியது. அவனிடம் இருந்த கத்தி மிகச் சிறியது. அதன் தசையைக் கூடக் கிழித்துச் செல்லாது. சிறு காயத்தினைத்தான் ஏற்படுத்தும். கரடிக்கு அது மேலும் சீற்றத்தினைத் தரும்.

முன்னிலும் பன்மடங்கு வெறியோடு கரடி அவனை அறைந்து நெரித்துவிடும். முடிவு அவ்வளவுதான்.

மதியழகன் எத்தகைய சூழ்நிலையிலும் தடுமாறாதவன்; சிந்தனையுடையவன் அல்லனோ? அவன் தன் நண்பனுக்கு நேரவிருக்கும் ஆபத்தினை உணர்ந்தான். இதுவரை அவனை ஆட்கொண்ட பயம் நீங்கிற்று. அவன் வெறி பிடித்தவன் போலானான். தான் ஏறியிருந்த மரத்திலிருந்து கீழே இறங்கினான். வேலன் எறிந்துவிட்டு ஓடிய அம்பும் வில்லும் தரையில் கிடந்தன. மதியழகன் அதனை எடுத்தான். கூரிய அம்பொன்றினைக் குறிபார்த்து அக்கொடிய விலங்கின் மேல் எய்தான். "விலகியே இரு. இல்லையெனில் நீ தொலைந்தாய்," என்றான் வெற்றிவேலன். "இதோ—இதை ஏற்றுக்கொள்," என்று முழங்கியவாறு அம்பைச் செலுத்தினான் மதியழகன். வெற்றிவேலனோ தன் நண்பன் நிலையை எண்ணி இரங்கினான்; அஞ்சினான்; அலறினான். "விலகிச் செல்லமாட்டாயோ? உன் முடிவை ஏன் தேடிக் கொள்கிறாய்," என்று இரைந்தான். கரடி பெருத்த அதிர்ச்சியுற்றது; கீழே பார்த்தது; உறுமிக் கொண்டே இறங்கத் தொடங்கிற்று. மதியழகன் நிலைகொள்ளாது ஓடினான். அருகிலிருந்த மரம் ஒன்றில் ஏறிக்கொண்டான். கரடியும் விரைந்து வந்தது. மதியழகனின் கால்கள் துவண்டன; ஏற முயன்றான். நடுக்கம் நிலைகுலையச் செய்தது. நெருங்கி வந்த கரடி அவன் காலின்மீது ஓங்கி அறைந்தது. சதை கிழிந்து குருதி கொட்டிற்று. அவன் அதனைப்

பொறுத்துக்கொண்டு மேலும் விரைந்து ஏறினன். "கிளையின் நுனிக்கே சென்றுவிடு," என்று வெற்றி வேலன் உரத்துக் கூறினன். இரண்டு கிளைகளாகப் பிரிந்து சென்ற கிளையொன்றில் நுனிப்பகுதிக்கே சென்றுவிட்டான். கிளையோ மிகச் சிறியது. அதில் தவழ்ந்தவாறே அவன் சென்ருன். பெருமூச்சு வாங்கியது. சுற்றிலும் பார்த்தான். கரடியும் மரத்தில் ஏறிக் கொண்டிருந்தது. மரத்தைக் காட்டிலும் கனத்த உருவினை உடைய அக்கரடி கிளைகளினூடே சென்று மறைந்த மதியழகனைப் பின் தொடர இயல வில்லை; வேருெரு கிளையைப் பற்றிச் சென்று கொண்டிருந்தது. மதியழகன் சற்று நிலை பெற்ருன்.

மரத்தில் சிறிது தூரம் ஏறித் திரும்பிய கரடி அவனைப் பார்த்துவிட்டது. எதிராகச் சென்ற கிளையிலிருந்து கவையாக அமைந்த அப்பகுதிக்கே வந்துவிட்டது. இனி மதியழகன் இருந்த கிளைக்குச் செல்ல வேண்டியதுதான். மெல்ல மெல்ல அக்கரடி கிளையில் நகர்ந்து சென்றது. மதியழகனின் கண்கள் அச்சத்தால் பார்வை இழக்கத் தொடங்கின. மதியழகனின் முடிவு யாதோ? காதுகள் அடைத்துக் கொண்டன. உடல் நடுங்கியது. இந்நிலையில் 'விர்' என்று அம்பு ஒன்று விரைந்து வந்தது; கரடியின் உடலில் தைத்தது. கரடி தன் உடலை ஒரு முறை சிலிர்த்துக்கொண்டது. மேலும் நகர்ந்துகொண்டே இருந்தது. மற்ருேர் அம்பு தொடர்ந்து வந்து தாக்கியது. இந்நிலையிலும் கரடி பெருஞ் சினத்துடன் நெருங்கி வந்து கொண்டிருந்தது. அதன் கண்கள் வெளிவருவன போலக் காணப்பட்டன.

உரோமங்கள் குத்திட்டு நின்றன. கரடியின் உடலி லிருந்து குருதி கொட்டத் தொடங்கிற்று. கரடி நிலையாக நிற்கமுடியாமல் தள்ளாடிற்று; எனினும் நகர்ந்துகொண்டுதான் இருந்தது. மற்றோர் அம்பு வந்து தாக்கியது. கரடி ஒரு முறை கிளையிலேயே புரண்டது. அதன் கூரிய நகங்களால் கிளையை இறுகப் பற்றிக்கொண்டது. கிளை ஒரு குலுங்கு குலுங்கிற்று. மதியழகன் கரடியின் பக்கமாகத் தூக்கி எறியப்பட்டான். கரடியின் கைகள் மீதே வந்து விழுந்தான். அவனை அறைவதற்குத் தன் கைகளைத் தூக்கிய அக் கரடி உயரத்திலிருந்து தரையில் உருண்டு விழுந்தது. வெற்றிவேலன் கரடியை வீழ்த்திய மகிழ்ச்சியால் ஆரவாரித்தான். அடுத்த விநாடி அவனிடமிருந்து துயரக் குரலும் எழுந்தது. மதியழகன் தன்னிலை கெட்டு நினைவிழந் தான்; அப் பெருமரக் கிளையினின்றும் கீழே விழுந்தான்.

வெற்றிவேலன் விரைந்து சென்று நண்பனை ஒருவாறு தாங்கிக்கொள்ள முன் வந்தான். ஆனால் அவனுக்குக் கால் முறிவோ, கை முறிவோ ஏற்படாதவாறு காத்ததும் அக்கரடியே. மெத்தென் றிருந்த அதன்மீது தான் விழுந்தான். வெற்றி வேலன் நண்பனைப் பிடித்து இழுத்துக்கொண்டான். கரடி விம்மியது. அதன் கை கால்கள் நடுங்கின. சற்று நேரத்தில் மூச்சும் அடங்கிற்று. நண்பர் இருவரும் புத்துயிர் பெற்ற மகிழ்ச்சியோடு ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டனர்.

---

# 3. தாமஸ் ஆல்வா எடிசன்

இன்று நாம் உலகில் பயன்படுத்தும் பொருட்களில் பல விஞ்ஞானத்தின் பயனுல் கிடைத்தவையாகும். மின் விளக்கு, தந்தி, தொலே பேசி, வானெலி ஆகியவை அவற்றுள் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளன. மின் விளக்குகள் இல்லேயெனின் நம் வீடுகளும், தெருக்களும் விளக்கம் பெறுவதில்லே. மின்சார ஓட்டம் தடைப்பட்டால் தொழிற் சாலேகளில் இயந்திரங்கள் இயங்க மாட்டா; தொலேபேசி இயங்காது; வானெலியில் இசையும் எழாது; இப்படி நம் வாழ்க்கையில் மிகுதியும் பயன் படுத்துகின்ற சில கருவிகளேத் தந்த அறிஞர் பலர். அவர்களுள் சிறந்தவர் தாமஸ் ஆல்வா எடிசன் ஆவார். அவரைப் பற்றி நாம் அறிந்து கொள்ள வேண்டாமா?

எடிசனின் தந்தை சாமுவேல் எடிசன் ஹாலந்து நாட்டைச் சேர்ந்தவர். அவர் கப்பலோட்டுதல், மீன் பிடித்தல் ஆகிய வேலேகளேச் செய்து வந்தார். அத்தொழில்களேவிட்டுக் கானடா நாட்டில் குடியேறினர். அங்கு வியன்ன என்னும் ஊரில் உணவு விடுதி ஒன்றினே நடத்தி வந்தார். அவ்விடத்தில் அரசுக்கு எதிராகப் புரட்சி செய்யும் கலகக்காரர்கள் ஒன்று கூடினர். அதனுல் சாமுவேலுக்குப் பல துன்பங்கள் ஏற்பட்டன. எனவே, சாமுவேல் அங்கிருந்தும் நீங்கிச் சென்றுர். அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ள மிலான் என்ற நகரில் குடியேறினர். நான்சி எலியட் என்ற

பள்ளி ஆசிரியையை மணந்து கொண்டு வாழ்க்கை நடத்தி வந்தார். அவர்களுக்குக் கி. பி. 1847 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் பதினோராம் நாள் ஆண் மகவு ஒன்று பிறந்தது. அக் குழந்தையே பிற்காலத்தில் 'புதுமைகளின் தந்தை', 'விஞ்ஞானத்தின் வழி காட்டி' என்று பாராட்டப் பெற்ற தாமஸ் ஆல்வா எடிசன் என்ற விஞ்ஞானியாகத் திகழ்ந்தது.

எடிசன் தம் அன்னையாரிடம் இளமையில் கல்வி கற்றார். எப்படிப்பட்ட சிக்கலான செய்தியையும் விரைவில் புரிந்து கொள்ளும் கூர்மையான அறிவுடையவராய்த் திகழ்ந்தார்; புத்தகங்களைப் படித்து உணர்ந்து கொள்வார். இயற்கையில் காணும் பல நிகழ்ச்சிகளையும், தோற்றங்களையும் கண்டு அறிவார். மிலான் நகரில் வாழ்ந்து வந்த அவர் தந்தைக்குப் போதிய வருவாய் கிடைக்கவில்லை. ஆகவே அவர் தம் மனைவி மக்களோடு டெட்ராய்டு என்னும் நகருக்குச் சற்றுத் தொலைவில் உள்ள 'ஹியூரான்' என்ற துறைமுகப் பட்டினத்திற்குச் சென்றார்; அங்குத் தானியங்களை வாணிகம் செய்து வந்தார். அப்போது தாமஸ் ஆல்வா எடிசனுக்கு ஏழு வயது ஆயிற்று. அவர் அவ்வூரிலுள்ள பள்ளிக் கூடம் ஒன்றில் சேர்க்கப்பட்டார்.

'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பது போல எடிசன் இளமையிலேயே நன்கு கல்வி கற்று வந்தார். அவர் எதையும் நன்கு சிந்தித்து உணரும் ஆற்றல் பெற்றவர். வகுப்பில் அடிக்கடி வினாக்களைக்

கேட்டுக் கொண்டே இருப்பார். அவற்றிற்கு ஏற்ற விடை தரமுடியாது ஆசிரியர் திகைப்பார். இதனால் ஆசிரியருக்கு அவரைப் பிடிக்க வில்லை. மற்ற மாணவர்கள் அவரைப் பார்த்துச் சிரிக்கும்படி கோபித்துக் கொள்வார். அப்போதெல்லாம் எடிசன் மிகவும் வருந்துவார். ஒரு நாள் ஆசிரியர் எடிசனைப் பார்த்துப், 'பித்துப் பிடித்து அலைபவன்' என்று கடிந்து கொண்டார்.

அன்று மாலை எடிசன் அழுது கொண்டே வீடு வந்தார்; புத்தகங்களை வீசி எறிந்தார். தாயிடம். "அம்மா, பித்து என்றால் என்ன?" என்று கேட்டார். "பித்து என்றால் மனக்கலக்கம், குழப்பம்" என்று அன்னை கூறினாள். அதைக் கேட்ட எடிசன் அழத் தொடங்கினார்; பள்ளியில் நடந்தவற்றைக் கூறி மேலும் மேலும் அழலானார். தாயார் எவ்வளவு ஆறுதல் கூறியும் கேட்க வில்லை. இதனால் அவர் தாய் ஆசிரியர் மீது சினமும் வெறுப்பும் கொண்டாள். பள்ளியினின்றும் தன் மகனை விலக்கிக் கொண்டாள்; எடிசனின் மூன்று மாதப் பள்ளிப் படிப்பும் முற்றுப் பெற்றது. வீட்டிலேயே அவருடைய தாய் அவருக்குக் கற்றுக் கொடுத்தாள். முன்னிலும் பன்மடங்கு ஆர்வத்துடன் எடிசன் கற்று வந்தார்.

எடிசனுக்குப் பத்துவயது நிரம்பியது. ஒரு நாள் அவருக்கு 'ரிச்சர்டு கிரீன் பர்க்' என்பவர் எழுதிய 'இயற்கையும் பரிசோதனைத் தத்துவமும்' என்ற புத்தகம் கிடைத்தது. அந்நூலில் மின்காந்தத் தந்தி, நீராவி எஞ்சின், மின்னல் முதலியவை பற்றிய உண்

மைகள் மிக எளிய முறையில் விளக்கப் பட்டிருந்தன. அதனைப் படித்த எடிசனுக்கு உள்ளத்தில் ஒரு புதிய உணர்ச்சி பிறந்தது. இளமையில் கேட்டு வந்த பல வினாக்களுக்குரிய விடைகள் அப்புத்தகத்தில் இருப் பதைக் கண்டு வியந்தார்; அதனால் அந்நூலைப் பல முறை படித்துப் படித்து மகிழ்ந்தார். தாமும் ஏன் இரசாயனப் பரிசோதனை செய்யக் கூடாது என்று எண்ணினார். தம் அன்னையின் அனுமதி பெற்று, வீட்டில் ஓர் அறையில் சோதனைச் சாலை ஒன்று அமைத்துக் கொண்டார். மைக்கேல் என்ற நண்ப னும் அவருக்குத் துணையாக இருந்து வந்தான். அச் சோதனைக் கூடத்தில் தாம் படித்தறிந்த சோதனை கள் பலவற்றை அவர் செய்து பார்த்தறிந்தார். இடையிடையே துன்பங்கள் பல தொடர்ந்தாலும் அவற்றை அவர் பொருட்படுத்தவில்லை. தம் குறிக் கோள் ஒன்றையே எண்ணிக் கொண்டு சோதனை களைச் செய்து வந்தார்.

ஹியூரான் துறை முகத்தில் புகை வண்டிக் கம்பெனியார் ஒரு தொழிற் சாலையைக் கட்டி வந்த னர். அதில் புதிய பொறிகள் பலவற்றைப் பொருத்தி வந்தனர். அப் பொறிகளைப் பற்றி அறிந்த எடிசன் வியப்புற்றார். தம் சோதனைக் கூடத்தையும் விரி வடையச் செய்ய வேண்டும் என்று நினைத்தார். "அதற்கு மிகுந்த பொருள் வேண்டுமே! வழி என்ன?" என்று சிந்தித்தார். நண்பர்கள் சிலர் புகை வண்டி நிலையங்களில் செய்தித்தாள், பழங்கள் ஆகிய வற்றை விற்றுப் பணம் சேர்க்கலாம் என்றனர். எடி

சனும் அதனை விரும்பினர். நிலையத்தாரிடம் அனுமதி பெற்றுச் செய்தித் தாள் விற்கத் தொடங்கினர். ஹியூரான் துறைமுகத்திலிருந்து சிக்காகோ, டெட்ராய்டு ஆகிய ஊர்களுக்குச் செல்லும் வண்டியில் தம் விற்பனையை நடத்தினர். எடிசனின் பெற்றோர்கள் இதை விரும்பவில்லை. இருந்தாலும் எடிசனது ஆராய்ச்சிக்கு அது துணை செய்யும் என்று அதற்கு உடன்பட்டனர். எடிசன் ஓய்வு நேரங்களில் தம் ஆராய்ச்சிகளுக்குப் பயன்படத் தகுந்த நூல்களைப் படித்து வந்தார். தமக்குக் கிடைத்த பணத்தில் ஒரு பகுதியை வீட்டுச் செலவுக்கும் கொடுத்து வந்தார்.

எடிசன் சோதனைகள் செய்துபார்ப்பதில் மிகுந்த ஆர்வம் கொண்டார். இரயில் வண்டியில் ஒரு கூடம் அமைக்க எண்ணினர். அதற்கான அனுமதியை நிலையத்தாரிடம் பெற்றுக் கொண்டார். செய்தித் தாள்கள் விற்கும் நேரத்தைத் தவிர மற்ற நேரங்களில் வண்டியிலேயே சோதனைகள் செய்து வந்தார். பழங்களையும், பத்திரிகைகளையும் அக்கூடத்தில் வைத்துக் கொண்டு விற்று வந்தார். செய்தித் தாளிலுள்ள முக்கிய தலைப்புக்களைத் தந்தி மூலம் அடுத்த நிலையங்களுக்குத் தெரிவிப்பார். அங்குள்ளவர்கள் அச் செய்திகளை மக்கள் பார்வைக்கு எழுதி வைப்பர். அவற்றைப் படித்த மக்கள் எடிசன் வருகைக்குக் காத்திருப்பார்கள். செய்தித் தாள்களும் விற்பனையாகும். இதனல் நாளிதழ் விற்பனை நாளுக்கு நாள் அதிகமாயிற்று. நிலைய அதிகாரிகளோடு எடிசனுடைய தொடர்பும் அதிகரித்தது. 1861 இல் குடியேற்ற

நாடுகளிடையே போர் மூண்டது. மக்கள் போர்ச் செய்தியை அறிய ஆர்வங் கொண்டனர். அதற்கடுத்த ஆண்டில் 'ஹில்லாஹ்' என்ற பகுதியில் போர் மூண்டது. அப்பொழுது எடிசன் டெட்ராய்டு நகருக்குச் சென்று செய்தித் தாள் ஆயிரம் படிகள் வாங்கி வந்து விற்றூர். இதனுல் நல்ல வருவாய் கிடைத்தது.

எடிசன் பத்திரிகை விற்று நல்ல அநுபவம் அடைந்தார். தாமே இதழ் ஒன்று வெளியிடலாம் என்று நினைத்தார்; அச் செயலில் முனைந்தார். பழைய அச்சுப் பொறியொன்றை வாங்கினுர். அதனைத் தம் சோதனைக் கூடத்தில் அமைத்தார். காகிதம், மை முதலியனவும் பெற்றுக் கொண்டார். எல்லா வேலைகளையும் தாமே செய்தார். நானூறு உறுப்பினர்களைச் சேர்த்துக் கொண்டார். 'வீக்லி ஹெரால்டு', என்ற வாரப் பத்திரிகை ஒன்றைத் தொடங்கினுர். ஓடும் புகை வண்டியில் அமைந்த அச்சுக் கூடத்திலிருந்து அப்பத்திரிகை வெளி வந்தது. அப்பத்திரிகையைப் பலரும் படித்தனர். ஆங்கிலேயர் ஒருவர் அதனைப் பாராட்டி, 'இலண்டன் டைம்ஸ்' என்ற பத்திரிகையில் எழுதினுர். இதனுல் எடிசன் பெயர் இலண்டன் மாநகரிலும் பரவத் தொடங்கியது.

செய்தித் தாள்களை விற்றுக்கொண்டு தம் சோதனையையும் செய்து வந்த எசடினுக்கு எதிர் பாராத முறையில் விபத்து ஒன்று ஏற்பட்டது. ஒரு நாள் ஓடும் புகை வண்டியில் எடிசன் நூல் ஒன்றைப்

படித்துக் கொண்டிருந்தார். திருப்பம் ஒன்றில் திரும்பிய போது வண்டி மிகவும் அசைந்து குலுங்கியது. அதனால் வண்டியில் சோதனைக்காக வைக்கப் பட்டிருந்த இரசாயனப் பொருட்கள் நிறைந்த கண்ணாடிப் புட்டிகள் கீழே உருண்டு விழுந்தன. பாஸ்பரம் என்ற எரிபொருள் சிதறியது. சிற்று நேரத்தில் பற்றி எரியத் தொடங்கியது. இதை அறிந்த இரயில் காவலர் இரயிலை நிறுத்தினார். தீயணைக்கும் கருவிகளுடன் விரைந்து வந்து தீயைப் பரவவொட்டாது அணைத்தார். எடிசனின் சோதனைக் கூடத்துப் பொருட்களை எடுத்து வெளியே எறிந்தார். எடிசன் தனியாக நின்று தவித்தார்; வாடிய முகத்தோடு தம் பொருட்களை எடுத்துக்கொண்டு வீட்டை அடைந்தார். அதன் பின்பு அச்சகத்தையும், சோதனைச் சாலையையும் தம் வீட்டிலேயே அமைத்துக் கொண்டார்.

எடிசன் ஒருநாள் 'மவுண்ட் கிளிமென்ஸ்' என்ற இரயில் நிலையத்தில் நின்றுகொண்டிருந்தார். அப்போது குழந்தை யொன்று புகைவண்டிப் பாதையில் விளையாடிக் கொண்டிருந்தது. சற்றுத் தொலைவில் ஒரு புகைவண்டி விரைந்து வந்து கொண்டிருந்தது. இதையறியாது விளையாடிக் கொண்டிருந்த குழந்தையருகே வண்டியும் நெருங்கி விட்டது. இன்னும் சற்று நேரத்தில் குழந்தைக்குத் தீங்கு நேர்ந்து விடுமே என்று எடிசன் அஞ்சினார். அவர் மனம் படபடத்தது. பாய்ந்து சென்று

குழந்தையை அப்புறப்படுத்தினர். கணப் பொழுதில் வண்டியும் விரைந்து சென்றது. அக் குழந்தையின் பெற்றோர் எடிசனின் தீரச் செயலைக் கண்டனர்; எடிசனை மிகவும் பாராட்டினர்.

அக்குழந்தையின் தந்தை மெக்ஸிகன் என்பவர் ஆவார். அவர் எடிசனுக்குத் தமக்குத் தெரிந்த தந்தி யனுப்பும் முறையைக் கற்றுக் கொடுக்க நினைத்தார். எடிசன் இவ் வாய்ப்பினை நன்கு பயன்படுத்திக் கொண்டார். மூன்று மாதங்களில் அக்கலையில் நன்கு தேர்ச்சி பெற்றார். பதினேழு வயது நிரம்பிய எடிசன் 'ஸ்டிராபோர்டு' என்ற நிலையத்தில் வேலைபார்க்கத் தொடங்கினர். அவ்விடத்திலேயே சோதனைச்சாலை ஒன்றை அமைத்தார்; முன்பு போலவே ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தார்.

எடிசன் பணியாற்றி வந்த நிலையத்தில் இரயில்கள் வரும் நேரத்தில் மட்டுந்தான் வேலை யிருக்கும். இரவு நேரங்களிலும் அப்படித்தான். பணிபுரிவோர் விழிப்புடன் இருக்க வேண்டும். அதற்காக மேலதிகாரி ஒரு வழியைக் கூறினர். ஒரு மணி நேரத்திற்கு ஒருமுறை வேலை செய்பவர் '6' என்ற எண்ணைக் குறிக்க வேண்டும் என்றார். எடிசன் இச் செயலை ஒழுங்காகச் செய்து வந்தார். தானகவே இயங்கும் பொறி ஒன்றினைக் கண்டு பிடித்தார். ஒரு மணி நேரத்திற்கு ஒரு முறை அது '6' என்று குறித்து வந்தது. ஒரு நாள் எடிசனின் மேலதிகாரி அவரைத் தொலைபேசியில் கூப்பிட்

டார். பதில் ஏதுமில்லை. ஆனால் முறைப்படி '6' என்ற எண் மட்டும் ஒரு மணிக்கு ஒரு முறை குறிக்கப்பட்டது. மேலதிகாரி நிலையத்திற்கு விரைந்து வந்தார். அங்கு எடிசன் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தார். இயந்திரம் தானாகவே இயங்கி '6' என்ற எண்ணை அனுப்புவதைக் கண்டு வியந்தார். ஆனால் கடமை தவறிய குற்றத்திற்காக எடிசனை வேலையிலிருந்து நீக்கினார்.

எடிசன் மீண்டும் ஒரு நிலையத்தில் வேலை பார்க்கத் தொடங்கினார். ஒரு நாள் இரவு எடிசன் பணியாற்றும் நிலையத்திலிருந்து புறப்படும் வண்டியை நிறுத்தி வைக்க அவசரத் தந்தியொன்று வந்தது. உடனே கைகாட்டியை இறக்கும் பணியாளனைத் தேடினார். எங்குத் தேடியும் அவனைக் காணவில்லை. இதனால் நிலையத்திற்குள் வந்த வண்டி நிற்காமலே சென்றது. எதிர் நிலையத்திலிருந்தும் வண்டி யொன்று வந்தது. வண்டி ஓட்டுபவரது திறமையினால் பெரும் விபத்திலிருந்து மக்கள் தப்பித்தனர். இச் செயலை அறிந்த மேலதிகாரிகள் எடிசனின் கவனக் குறைவினால் பெருங்கேடு விளைந்திருக்கும் என்று அவரைச் சிறைக்கனுப்ப எண்ணினர். எடிசன் இதனை அறிந்தார். அவர் கொண்ட துன்பத்திற்கு அளவே இல்லை. ஆகவே அவர் கானடா நாட்டை விட்டு வெளியேறி விட்டார்.

சிறப்பான தொழிலைக் கற்றறிந்த எடிசனுக்கு வேறோர் இடத்தில் வேலை கிடைத்தது. 'மில்டன்

ஆடம்ஸ்' என்பவர் உதவியால் 'மேற்கு ஐக்கியத் தந்திக் கழக'த்தில் வேலை கிடைத்தது. அங்கு, விரைவாகச் செய்திகளைத் தந்தியில் அனுப்புவதில் வல்லவர் என அவரை அனைவரும் பாராட்டினர்.

அங்கும் எடிசன் தம் சோதனைகளை விடாது செய்து வந்தார். 1869 இல் புதிய கருவி ஒன்றினைக் கண்டார். 'ஓட்டு ரிக்கார்டர்' என்ற அந்தக் கருவி சட்டமன்ற நிகழ்ச்சிகளைப் பதிய வைக்கும். ஆனால் அரசியலார் அதனைப் பயன்படுத்துவதற்கு உடன்படவில்லை. எடிசன் மக்கள் விரும்பாத பொறிகளைக் காண்பதில் பயனில்லை என்பதை உணர்ந்தார். தந்தியில் புதுமுறைகளைப் புகுத்தினர். ஒரே தந்திக் கம்பியில் இரண்டு செய்தி அனுப்பும் முறையைக் கண்டறிந்தார். இதற்கும் ஆக்கமும் ஊக்கமும் கிடைக்கவில்லை. மேலும் அந்நகரில் வாழ்வது சரியன்று என்று எண்ணித் தம் எதிர்காலத்தை நினைத்து நியூயார்க்கு நகருக்குப் புறப்பட்டார்; கையில் சிறிதளவு கூடப் பொருளின்றிப் புறப்பட்டுச் சென்றார்.

எடிசன் நியூயார்க்கு வீதி வழியே சென்று கொண்டிருந்தார்; பசியால் வாடினர். வழியில் ஒரு தேநீர் விடுதியின் அருகில் நின்றார். அங்கு ஒருவர் தேநீரைச் சிறிது பருகுவதும், மீதியைக் கீழே கொட்டுவதுமாக இருந்தார். அதனைக் கண்ட எடிசன் அவரை அணுகினர். "ஐயா, இன்று முழுவதும் உணவின்றி நான் வாடுகிறேன். தாங்கள் கீழே

கொட்டும் தேநீரினை எனக்குக் கொடுங்கள்,'' என்றார். அதற்கு அவர் தாம் ஒரு தேநீர்ப் பரி சோதகர் என்று கூறி வேண்டிய உணவுகளை வாங்கித் தந்தார்; இவ்வாறு பசியால் வாடி நலிந்தார். பல நாட்கள் பல இடங்களில் அலைந்து திரிந்தும் வேலையொன்றும் கிடைக்கவில்லை. இறுதி யாகத் தங்கம் விலை காட்டும் அலுவலகம் சென்றார். அங்கும் வேலையில்லை என்றனர். ஆனால் அங்குள்ள இயந்திரங்களின் அமைப்பைக் கண்டார். அங்கே தங்குவதற்கு மட்டும் நண்பர்களின் உதவியால் அனுமதி பெற்றார். காலத்தை வீணாக்காமல் அக் கருவிகளைக் கண்டு, புதிய புதிய எண்ணங்களை உரு வாக்கிக் கொண்டார். அவ்வெண்ணங்களே பிற் காலத்தில் புதிய புதிய கருவிகளைக் கண்டறிவதற்குக் காரணமாயின.

ஒருநாள் தங்கம் விலை காட்டும் பொறியில் பழுது ஏற்பட்டது. பலர் முயன்றும் அதனைச் சீர்ப்படுத்த முடியவில்லை. எடிசன் தலைமை அதிகாரி யைச் சந்தித்தார். பழுது பார்க்கும் வாய்ப்பினைத் தமக்குக் கொடுக்குமாறு வேண்டினர். அவரும் அதற்கிசைந்தார். மிகக் குறைந்த நேரத்தில் இயந் திரம் சீர்ப்பட்டு இயங்கத் தொடங்கியது. அந்நிலைய அதிகாரி மிக்க மகிழ்ச்சியுற்றார்; எடிசனைப் பாராட் டினர். மாதம் 300 டாலர் ஊதியம் கொடுப்பதாக வேலைக்கமர்த்திக் கொண்டார். அங்கு அவருடைய பல்வேறு ஆக்கப் பணிகளுக்கும் ஊக்கம் தந்து

பலர் உதவினர். அங்கு ஒரே தந்திக் கம்பியில் ஆறு வெவ்வேறு செய்தி அனுப்பும் முறையையும் அவர் கண்டார். ஆறு ஆண்டுகள் தந்தி அனுப்பும் முறையில் பல புதுமைகளைப் புகுத்தினர். அவற்றில் ஒன்று தான் தானே அச்சடிக்கும் தந்தி முறை.

எடிசனின் புகழ் வளர்பிறை போல வளர்ந்தது. அவரது திறமையை அறிந்த "கோல்டு அண்டு ஸ்டார் டெலிகிராப்" நிலையத் தலைவர் எடிசனை அழைத்துத் தம் நிலையத்திற்குப் பயன்தரும் 'ஸ்டாக் டேக்கர்' என்னும் முறையில் புதியதொரு கருவியை அமைக்கும்படி கேட்டுக் கொண்டார். எடிசனும் மிகக் குறைவான காலத்தில் அதனைச் செய்து இயக்கிக் காட்டினர். நிலையத்தார் அக் கருவியைத் தமக்கே உரிமையாக்க எண்ணி விலை கேட்டனர். எடிசனே அவர்கள் விரும்பியதைத் தரலாம் என்றார். நல்லெண்ணம் கொண்ட அந்நிலையத் தலைவர் எடிசனுக்கு 40,000 டாலர் கொடுத்தார். அப் பெருந் தொகையை எடிசன் பெரிதும் போற்றினர்; தம் அன்னைக்கு இந்த நல்ல செய்தியை அனுப்பினர். தாம் பெற்ற பெருந் தொகையைக் கொண்டு, இரு தொழிலாளர் நண்பர்களின் உதவியால் தம் அலுவலகம், சோதனைச் சாலை, தொழிற் சாலை ஆகியவற்றைச் செப்பஞ் செய்தார். அப்பொழுது அவர் கண்டு பிடித்த கருவிகளின் எண்ணிக்கை நூற்றிருபது ஆயிற்று. அவை அனைத்தையும் தமக்கு அவர் உரிமையாக்கிக் கொண்டார்.

எடிசனின் அன்னை நோய்வாய்ப்பட்டிருந்தாள்; தன் மகன் சிறப்பாக வாழ்வதைக் கண்ட மன மகிழ்ச்சியுடன் 1871 ஆம் ஆண்டில் இவ்வுலகை விட்டு நீங்கினாள். பின்னர்த் தந்தை தம் மகனுடன் வாழ்ந்து வந்தார். தம் தந்தையின் விருப்பத்திற் கிணங்க நியூயார்க் நகரிலிருந்து 'பென்சில்வேனியா' என்ற புகைவண்டி நிலையத்தருகே சோதனைச் சாலை ஒன்றை அமைத்துக் கொண்டார். தங்குவதற்கு அழகான வீடு ஒன்றும் கட்டிக் கொண்டார். அவர் சோதனைகளில் ஆர்வத்துடன் ஈடுபட்டார்.

கிரகாம் பெல் என்பவர் கண்டுபிடித்த தொலை பேசியில் பல குறைபாடுகள் இருப்பதை எடிசன் கண்டுபிடித்தார். அக் குறைகளைப் பெரிதும் முயன்று நீக்கினார். எடிசன் கண்டுபிடித்த 'டிரான்ஸ் மிட்டர்' என்ற கருவியின் சிறப்பை உணர்ந்த மேற்குத் தந்திக் கழகத்தார், அதனை நூறாயிரம் டாலர் கொடுத்து வாங்கினர். இங்கிலாந்தில் வாழ்ந்த செல்வந்தர் ஒருவர் 'மின் இரசாயனச் செலுத்தி' என்னும் கருவியை விலைக்கு வாங்கிக் கொண்டார். இவ்வருவாய் அனைத்தையும் ஆராய்ச்சி வளர்ச்சிக்கு அவர் பயன்படுத்தினார்.

ஒருநாள் சோதனைச் சாலையில் சோதனை செய்து கொண்டிருக்கும் போது, அவரது வாய் ஒரு பாடலை முணுமுணுத்தது. அப்பாட்டின் ஒலி மின்சார ஒலி பரப்பியின்மீது பட்டது. அப்போது ஒலி பரப்பும் கருவி அவரது கையைத் தாக்கியது.

அதனை எடிசன் நன்கு கவனித்தார். எஃகுக் கருவியை அசைக்கும் ஒலியை, ஒரு தகட்டில் பதிவு செய்ய முடியும் என்று எண்ணினர். அவ்வாறு கண்ட கருவியே 'போனோ கிராப்' என்பதாகும்.

தாம் கண்டறிந்த பேசும் பொறியில் மரப் பலகை ஒன்றினை வைத்தார். கைப்பிடியோடு இணைக்கப்பட்ட உலோக உருளையோடு அதனை இணைத்தார். தொலை பேசியில் உள்ளது போல் வாய்க் கருவி ஒன்று இருந்தது. உருளையின் மீது மென்மையான உலோகத் தகட்டினை அவர் பொருத்தினர். அதன்பின் 'மேரியிடம் ஓர் ஆட்டுக் குட்டி இருந்தது' என்ற பாடலைப் பாடினர். கைப்பிடியைச் சுழற்றிப் பழைய நிலைக்குக் கொண்டு வந்தார். மீண்டும் சுற்றத் தொடங்கியதும், அது முன் எடிசன் பாடிய பாடலைப் பாடியது. அவருக்கும், அவரைச் சுற்றி நின்றவருக்கும் ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. நகரத்து மக்கள் பலரும் வந்து அக் கருவியைப் பார்த்தும், ஒலியைக் கேட்டும் மகிழ்ந்தனர்.

19 ஆம் நூற்றாண்டில் 'வில்லியம் வாட்ஸ்' என்பவர் கண்ட 'மின்சார விளைவு' விளக்கில் பல குறைபாடுகள் இருந்தன. அவ்விளக்கு எரியும்போது பலமான ஒலியும், மிகுந்த வெப்பமும், தீய நாற்றமும் வெளிப்பட்டன. அதனுள் வைக்கப்பட்டிருக்கும் கரித்துண்டு மிக விரைவில் எரிந்து விடும். இக்குறை பாட்டினை நீக்க எடிசன் ஆராய்ச்சியில் ஈடுபட்டார். அப்போது பலர் எள்ளி நகையாடி வீண் முயற்சி

என்றனர். இருந்தும் எடிசன் தொடர்ந்து சோதனை நடத்தி வந்தார்.

ஒருநாள் எடிசன் சிந்தனையில் ஈடுபட்டவாறே தம் சட்டைப் பொத்தானைத் திருகிக் கொண்டிருந் தார்; சிறிது நேரத்தில் அது கையோடு வந்து விட்டது. அதில் இணைக்கப்பட்டிருந்த இழையைக் கண்டதும் அவருக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அவ் விழையைக் கரியாக்கினர். அதனை விளக்கினுள் பொருத்தினர்; அவ்விழை நாற்பத்தெட்டு மணி நேரம் ஒளியைத் தந்தது. காற்றுப் புகாத கண்ணா டிக்குள் கரியிழையில் மின்சாரம் பாயும்போது ஒளி தருவதைக் கண்டார். 1879 ஆம் ஆண்டு 'மென்லோ பூங்காவை' ஒளி விளக்குகளால் அலங்கரித்தார். இதனைக் கண்ட மக்கள் அவரை 'மென்லோவின் மந்திரவாதி' என்று பாராட்டினர். நாளடைவில் மின்சாரம் உண்டாக்கும் கருவி, விளக்குப் போடும் குமிழ்கள், இணைப்புப் பெட்டிகள், அளவைக் காட்டும் கருவிகள் முதலியன கண்டார். இன்று மின்சாரம் செய்யும் உதவிகளுக்கு அளவே இல்லை யன்றோ!

எடிசன் நியூஜெர்சியிலுள்ள 'வெஸ்ட் ஆரஞ்சு' என்ற இடத்தில் தம் சோதனைக் கூடத்தை விரிவாக அமைத்துக் கொண்டார். 1887 ஆம் ஆண்டில், உயிர்ப் பொருட்களின் அசைவையும், ஒலியையும் படமாக்க எண்ணினர். முப்பது ஆண்டுகளாக மிகவும் முயன்று 'சுழல் படக் காமிரா' வைக் கண்டு

பிடித்தார். முதலில் சிறிய அளவில் இருந்த அசையும் படம் காட்டும் கருவியைக் கண்டு பிடித்தார். அதனால் ஒரு சமயத்தில் ஒருவர் மட்டுமே படத்தினைக் காண முடிந்தது. பின்னர் பலரும் காணக் கூடியதாக அதனை அவர் திருத்தி யமைத்தார். 1894 ஆம் ஆண்டு 'பிரான்ஸிஸ் ஜென்கின்ஸ்' என்பவர் கண்ட கருவியில் புதிய முறைகளைக் கையாண்டு, அதில் அசைகின்ற படங் களைக் காட்டினார். அதனோடு பேசும் பொறியைப் பொருத்தி ஒலியமைப்பையும் இயக்கிக் காட்டினார். தொடக்கத்தில் பிடித்துக் காட்டிய படங்கள் சிறிது நேரமே ஓடின. இவ்வாறு அரிதின் முயன்று செய்த படக்கலை இன்று அடைந்துள்ள முன்னேற்றத்திற்கு அளவே கிடையாது. இதற்கெல்லாம் முதற்காரண மானவர் எடிசனே யாவார்.

எடிசன் தம் அறுபத்து மூன்று வயதுக்குள் இரண்டாயிரத்து ஐந்நூற்றுக்கும் அதிகமான கண்டு பிடிப்புக்களையும், ஆயிரத்து முந்நூற்று முப்பது புதிய கருவிகளையும் கண்டு உலகிற்கு அளித்தார். 1889 ஆம் ஆண்டு பாரிசு நகரில் நடந்த கண் காட்சியில் அமெரிக்க நாட்டுக் கண்டு பிடிப்புக்களில் எடிசன் கண்டவை மூன்றில் ஒரு பங்காக அமைந்தன. அதனால் அமெரிக்க அரசும் அவரைப் பாராட்டியது.

தன்னம்பிக்கை, விடாமுயற்சி, மனந்தளராமை, அசைவிலா ஊக்கம் இவற்றையே உருவாகக் கொண்ட எடிசன், தமது 84 ஆம் வயதில் 1931 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 18 ஆம் நாள் இவ்வுலக

வாழ்வை நீத்தார்; என்றும் அழியாத புகழுலக வாழ்வை அடைந்தார்.

இன்று மின்விளக்குகளின் ஒளியைப் பயன் படுத்தும்போதும், திரைப் படங்களைக் கண்டு மகிழும் போதும் நாம் எடிசனை நினைத்து நன்றி செலுத்த வேண்டும். உழைத்தால் முன்னேறலாம் என்று அவர் வாழ்க்கை நமக்கு வழிகாட்டுகிறது. நாமும் அவரைப் போல் அயராது உழைத்து உயர்வு பெறுதல் வேண்டும்.

# 4. எவ்வளவு நிலம் வேண்டும்?

நாஞ்சில் நாடு நீர்வளமும், நிலவளமும் உடையது. தாமரைக்குளம் அங்குள்ள ஓர் அழகான சிற்றூர். அவ்வூர் உழுதுண்டு வாழும் உழவர் குடும்பங்கள் மிகுந்த இடம். 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்', 'சீரைத்தேடின் ஏரைத்தேடு' என்னும் சான்றோர் வாக்கிற்கிணங்க முத்து என்னும் உழவன் ஒருவன் உழுதொழிலைச் செய்து வாழ்ந்து வந்தான்.

ஒரு நாள், முத்துவின் மனைவியான அல்லியைப் பார்க்க அவள் தமக்கை முல்லை வந்தாள். முல்லையைக் கண்ட அல்லி முகமலர்ந்தாள். தன் நிலைக்கேற்றவாறு விருந்து கொடுத்தாள். அவ்விருந்து அவளுடைய ஏழ்மை நிலைக்கேற்ப அமைந்திருந்தது. முல்லையோ பெருநகரம் ஒன்றில் செல்வாக்குடன் வாழ்பவள். தன் தங்கையிடம் தன் செல்வச் சிறப்பை எடுத்துக் கூறலானாள். தன்னுடைய அடுக்கு மாளிகைகள், பளிச்சிடும் நகைகள், விதவிதமான ஆடைகள், நாவிற்கு இன்சுவை மிக்க உணவு வகைகள், இன்பப் பொழுது போக்குக்காகப் படக் காட்சிகள், நாடகங்கள் ஆகியவற்றைக் காணுதல், தான்வசிக்கும் பெருநகரின் பாங்கு இவையனைத்தையும் கூறிக்கொண்டே போனாள். அல்லிக்கு இவை யாவும் தன் ஏழ்மை நிலையினை எடுத்துக் காட்டுவதாகவே தோன்றிற்று. ஆகவே, அல்லி முல்லையைப்

பார்த்து, "அக்கா, நாங்கள் ஏழைகள் தாம்; ஆனால் உழைக்காமல் உண்பவர்களல்லர். எங்கள் சிற்றூர் நாகரிகமற்றதாக இருக்கலாம். ஆனால் பட்டணத்தில் உள்ளதுபோல் வெளிப் பகட்டுடன் வாழும் வாழ்க்கை எங்களிடம் கிடையாது. சிற்றூர் மக்கள் பெரும்பாலும் பண்பு நலன் வாய்ந்தவராகவும், அன்புடையவராகவும் இருப்பர். இன்ப வாழ்வுக்கு ஏணியாம் ஒழுக்கத்தை வளர்த்துப் பிறரும் தாமும் வாழும் வாழ்வே எனக்கு வேண்டும்," என்று கூறினாள். இவ்விருவர் உரையாடலையும் பக்கத்து அறையில் படுத்திருந்த அல்லியின் கணவனான முத்து கேட்டுக் கொண்டிருந்தான்.

"இருவரும் தங்கள் தங்கள் நிலையை மேம்படுத்திக் கூறுகிறார்கள். தற்போது எனக்கு நிலபுலன்கள் மிகக் குறைந்த அளவே உள்ளன. இவற்றைக் காட்டிலும் அதிகமான நிலங்கள் எனக்கு உரிமையாக இருந்தால் எவ்வளவு சிறப்பாக வாழ்வேன்! என்னை வறுமையில் வாட வைக்கும் விதிக்கடவுளைக் கூட விரட்டி யடிப்பேன்," என்று முத்து தனக்குத் தானே கூறிக்கொண்டான். இச்சொற்களைக் கேட்ட விதிக்கடவுள் மிகுந்த சினங் கொண்டார். "என்னை வென்றவர்கள் இவ்வுலகில் எவரும் இலர்! மன்னர் மன்னர்களையே தம் நிலை இழக்கச் செய்தவன் நான். என் திருவிளையாடல்களை அறிவிற் சிறந்த சான்றோர்களாலும் எடுத்துக்கூற முடியாது. அவ்வாறிருக்க எளிய ஏழை மனிதனான, இந்த முத்து எனக்கு எம்மாத்திரம்! இவன் என்னை விரட்டி

அடிப்பதைத்தான் பார்த்து விடுகிறேன்,'' என்று தமக்குள் கூறிக்கொண்டார்.

முத்துவின் நிலத்தோடு இணைந்ததாகச் செல்வந்தர் ஒருவருடைய நிலங்கள் இருந்தன. அவர் மேலைநாடு சென்று படிக்க விரும்பினர். இதனை முத்து அறிந்தான்; செல்வந்தரை அணுகினன். "தங்களுக்குரிய ஐம்பது ஹெக்டேர் நிலத்தினையும் நான் வாங்கிக்கொள்ள விரும்புகிறேன். ஆனல் தற்போது பாதித் தொகையினைத் தந்து விடுகிறேன். பாதியை இரண்டு ஆண்டுகள் கழித்துத் தருகிறேன்;'' என்றான். அதற்குச் செல்வந்தர் உடன்பட்டார். உடனே முத்து தன் வீட்டிற்கு வந்தான். தன் மனைவியின் அணிகலன்கள், வேறு பொருட்கள் பலவற்றையும் விற்றுப் பணம் திரட்டினன். செல்வந்தரிடம் கொடுத்து நிலத்தைப் பெறுவதற்கான உறுதி முறி எழுதிக்கொண்டான்.

ஐம்பது ஹெக்டேர் நிலத்திற்கு முத்து உரிமையுடையவன் ஆனன். அவன் கொண்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அவன் நிலத்தைப் பண்படுத்தவும், விதைகளைச் சேர்க்கவும் தொடங்கினன். நிலத்தையும், அது தனக்கு அளிக்க இருக்கும் பெரும் செல்வத்தையும் பற்றி நினைத்தான். அதனல் தான் எத்தகைய சீரும் சிறப்புமான வாழ்க்கை நடத்தலாம் என்று எண்ணிப் பார்த்தான். அவன் உள்ளம் மகிழ்ச்சியால் நிரம்பியது; ஊக்கம் எழுந்தது. முன்னிலும் பன்மடங்கு ஆர்வத்தோடு அவன் நிலத்தில் உழைக்க

லானன். நிலம் அவன் உழைப்பினை ஏற்றது; தகுந்த பயனைக் கொடுத்தது. முத்து தான் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுத்து விட்டான். அது மட்டுமன்றி நிலமகள் அவனுக்குப் பருவந்தோறும் நிறைந்த நிதியையும் சேர்த்துக் கொடுத்தாள்.

இவ்வாறு வாழும் முத்துவின் நிலத்தில் அவ்வப்பொழுது பிறருடைய ஆடு, மாடுகள் மேய்ந்து விடுவதுண்டு. முத்து அதனைப் பிறர் செய்யும் தொல்லையாகக் கருதினன்; "வேண்டுமென்றே செய்கின்றனர்," என்பான். "பொறாமையினால் தன் பயிருக்கு அழிவு தருகின்றனர்," என்று சினங்கொள்வான். பலமுறை ஆடுமாடுகளுக்கு உரியவரிடம் சொல்லிப் பார்த்தான். பயன் ஏதும் இல்லை. எனவே தானும் அவர்களுக்குத் தொல்லை தர நினைத்தான். இருதரப்பினர் வழக்கும் நீதிமன்றம் வரை சென்றது. ஆனால் பாவம்! முத்துவின் பக்கம் நின்று ஆதரவு தருவோர் இல்லை. எனவே, ஊராருக்கே நன்மை கிடைத்தது. தனக்குப் பெரும் அநீதி இழைக்கப் பெற்றதை நினைந்து நினைந்து முத்து உள்ளம் வெதும்பினன்.

இந்நிலையில் முத்துவின் வீட்டிற்கு அயல் நாட்டினன் ஒருவன் வந்தான். தன்னாட்டில் பல ஹெக்டேர் நிலம் பயிரிடப்படாமல் கிடப்பதைக் கூறினன். ஹெக்டேர் ஒன்றுக்கு ஐயாயிரம் ரூபாய் வீதம் கொடுத்து அந்நிலங்களை வாங்கலாம் என்றான். அதனைக்கேட்ட முத்துவுக்கு ஓர் எண்ணம் தோன்

றியது. "நான் அங்குச் சென்ருல் மிகுதியான பரப்புடைய நிலத்திற்குத் தலைவனுகலாம். என் ஆணைக்குப் பணியும் ஆட்கள் பலர் என்கீழ் வேலை செய்வார்கள். நானும் செல்வந்தனுக மதிக்கப்படு வேன். முல்லை இனி என் மனைவியிடம் அவள் பெருமையை எடுத்துச் சொல்லவும் முடியுமா?" என்று கற்பனை செய்தான். உண்மை நிலையை அறிய விரும்பினுன்; அடுத்த நாளே அந்நாட்டுக்குப் புறப்பட்டுச் சென்ருன்.

அயல்நாடு சென்ற முத்து, உண்மையாகவே பெரும் பரப்பளவுள்ள நிலம் தரிசாகக் கிடப்பதைக் கண்டான். அங்குப் பரந்த நிலப்பாகங்களைச் சொந்த மாக்கிக் கொண்டு சிலர் வாழ்ந்து வந்தனர். அவர்களை அணுகிச் செய்திகள் அனைத்தையும் முத்து தெரிந்து கொண்டான். தன் நாட்டிற்கு மீண்டும் வந்தான். நிலபுலங்கள், ஆடு, மாடு, வீடு, வாசல் அனைத்தையும் நல்ல விலைக்கு விற்ருன். பொருளைச் சேர்த்துக் கொண்டான்; தன் மனைவியை அழைத் துக்கொண்டு அந்நல்ல நாட்டை அடைந்தான்.

தகுந்த விலையைக் கொடுத்துச்சில ஹெக்டேர் நிலங்களை முத்து வாங்கினுன். இலவசமாகக் கிடைத்த ஒரு பகுதியையும் சேர்த்து நூற்றைம்பது ஹெக்டேர் நிலத்திற்கு முத்து உரிமையாளன் ஆனுன். உழவுத் தொழிலுக்கு வேண்டிய கருவிகள், மாடுகள் ஆகிய வற்றை வாங்கினுன்; பண்ணையின் நடுவில், தான் வாழ அழகிய வீடு ஒன்றினையும் கட்டிக்கொண்டான்.

முத்து, தான் குடியேறிய நாட்டில் சிறந்த வளமான வாழ்க்கை நடத்தினன். நாளுக்கு நாள் அவனுக்குச் செல்வம் பெருகி வளர்ந்தது. எனினும் பொருளாசை மட்டும் அவனை விட்டு நீங்கவில்லை. பிறருடைய நிலங்களையும் குத்தகைக்கு எடுத்தான்; மீண்டும் இரவு பகல் எனக் கருதாமல் நிலத்திலே உழைத்தான்; ஓய்வின்றி உழைத்தான்.

முத்து, செல்வத்தைப் பெருக்குவதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்தான். அவன் கொண்ட பேராசைக்கு ஏற்றபடி செய்தி ஒன்று அவனுக்குக் கிடைத்தது. சற்றுத் தொலைவில் மலை ஒன்றிருந்தது. அம்மலை நிலத்தலைவன், தன் நிலங்களை ஹெக்டேர் ஒன்றிற்கு ஐந்நூறு ரூபாய் வீதம் கொடுப்பதாகக் கேள்விப்பட்டான். அத்தலைவனுக்கு வேண்டிய பொருள் கொடுத்து அவனோடு நட்புக்கொண்டால்; மேலும் குறைந்த விலையில் கொடுப்பதாக அறிந்தான். பேராசை அவன் பிடர் பிடித்துத் தள்ளியது. அந்த மலைத் தலைவனைக் காண முடிவு செய்தான்.

முத்து கையில் சிறிதளவு பணத்தை எடுத்துக் கொண்டான். துணைக்கு வேலையாள் ஒருவனையும் கூட்டிக்கொண்டு, அத்தலைவன் விரும்பும் பொருட்களையும் வாங்கிக்கொண்டு பலநாள் பயணம் செய்தான். இறுதியாக மலைப்பகுதியைச் சென்றடைந்தான். மலை வாழ்மக்கள் சிறுசிறு குடிசைகளில் வாழ்ந்து வந்தனர். போதும் என்ற மனத்தோடு

தமக்கு வேண்டிய நிலத்தினைப் பயிரிட்டு அவ் வருவாயில் அமைதியான வாழ்க்கை நடத்தினர். முத்துவின் வருகை அவர்களுக்கு மிகுந்த மகிழ்ச் சியைக் கொடுத்தது. அவனை அணுகி, அவன் வந்த செய்தியைக் கேட்டறிந்தனர்.

முத்து கொண்டுவந்த பரிசுகள் அனைத்தையும் மலைத்தலைவன் கண்டு மகிழ்ந்தான். அவற்றைத் தம் நாட்டு மக்களுக்குப் பகிர்ந்து கொடுத்தான். தலைவன் முத்துவைப் பார்த்து, "நெடுந் தொலைவு நடந்து களைத்திருக்கிறீர்கள். நல்ல ஓய்வு எடுத்துக் கொள் ளுங்கள். எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இங்கே தங்கலாம். ஆனால் தாங்கள் எங்களை நாடிவந்த செய்தியைக் கூறினால் நாங்கள் அதனை நிறை வேற்றுகிறோம்," என்று நயமாகக் கூறினான். முத்து அத்தலைவனை நோக்கி "ஐயா! பல கல் தொலைவில் வாழும் எனக்கு உங்கள் அன்பு மிக்க நட்புக் கிடைத்தது. நீங்கள் என்பால் காட்டும் ஆதரவு மிகவும் பெரிதாகும். எனக்கு உங்கள் மலைப் பகுதியில் போதிய இடம் அளித்தால் இங்கே என் மனைவியோடு நான் வாழ விரும்புகின்றேன்", என்று கூறினான்.

உடனே தலைவன் "இப்பகுதியில் மிகுதியான நிலம், பயிரிடுவார் இல்லாமல் வீணாகக் கிடக்கின்றது. நீர்வளமும் உண்டு; விலங்குகளும் பயிருக்குச் சேதம் விளைப்பதில்லை; எத்தனை முறை பயிரிட்டாலும் நிலவளமும் குறைவதில்லை; இயற்கையும் மாறுபடுவ

தில்லை. ஆகவே எவ்வளவு நிலம் வேண்டுமானாலும் நீங்கள் எடுத்துக் கொள்ளலாம்,'' என்றான். " தலைவ! தங்கள் பண்பட்ட உரைகளுக்கு நன்றி. ஆனால், நான் விரும்பும் நிலத்தினை எப்படி அடைய முடியும். நிலத்திற்கு எல்லை வகுத்து, ஆவணம் பதிவு செய்த பின்னர்த்தான் நிலம் எனக்கு உரிமையாகும்", என்றான். தலைவனும், " நீங்கள் கூறுவதும் உண்மையே. சற்றுத் தொலைவிலுள்ள நகரத்திற்குச் சென்று ஆவணம் எழுதிப் பதிவு செய்யலாம்", என்றனன். " அப்படியாயின் ஹெக்டேர் ஒன்றுக்கு என்ன விலை கேட்கிறீர்கள்?" என்று முத்து கேட்டான்.

" இங்கு ஹெக்டேர் என்று ஓர் அளவே கிடையாது. எங்களுடைய விலை எப்பொழுதும் ஒரே சீராகத்தான் இருக்கும். அதாவது ஒரு நாள் நிலம் ஆயிரம் ரூபாய்", என்றான் தலைவன். அதன் பொருள் முத்துவுக்குத் தெரியவில்லை. " அப்படியென்றால் என்ன ?" என்று கேட்டான். " ஒரு நாள் நிலம் என்பது காலை முதல் மாலை வரை எவ்வளவு இடம் சுற்றி வருகிறீர்களோ அவ்வளவு இடம் உங்களுக்கு உரிமையாகும். அப்பகுதி முழுவதும் ஆயிரம் ரூபாய் விலைக்குரியது," என்று பொருள் கூறினான். மேலும் " இதுதான் இங்குள்ள கணக்கு" என்றான். ஆசையால் வாய் திறந்தான் முத்து. " அப்படியானால் ஒரு நாளில் ஒருவன் மிகப்பெரிய அளவுள்ள நிலத்திற்கு அதிபதியாகி விடலாமே," என்றான்.

"நீங்கள் எவ்வளவு நிலம் சுற்றி வந்தாலும் அந்த நிலம் உங்களுக்கு உரியது தான். ஆனல் புறப்பட்ட இடத்தில் சூரியன் அடையும் முன் வந்து விடவேண்டும். திருப்பங்களில் மண் வெட்டியால் பள்ளங்கள் வெட்டி அடையாளங்கள் செய்ய வேண்டும். அப்போதுதான் நிலம் உங்களுக்கு உரிமையாகும். குறிப்பிட்ட நேரத்தில் வரத் தவறினல், முன் கட்டப்பட்ட தொகை ஆயிரம் ரூபாயையும் இழக்க நேரிடும்," என்று மலைத் தலைவன் கூறினன்.

இது தன் ஆசைக்கேற்ற திட்டமென முத்து மகிழ்ந்தான். "உங்கள் திட்டம் மிகமிகப் பொருத்த மானது. எனக்கு மிகவும் விருப்பமான நிலங்களைப் பெறுவேன்; நாளைக் காலையில் புறப்படுவோம்", என்ருன்.

மறுநாள் அதிகாலையில், முத்து நிலங்களைச் சுற்றிவந்து எல்லைகளைக் குறிக்க வேண்டும் என்று இருவரும் முடிவு செய்தனர். அன்றிரவு மலை வாழ் மக்கள் முத்துவிற்கு நல்ல விருந்து அளித்தனர். பின் ஆடலும் பாடலும் நடத்தி மகிழ்வித்தனர். முத்து இன்பக்கடலில் மூழ்கினன்.

அடுத்த நாள் காலையில், முத்து சுறு சுறுப்பாகக் காணப்பட்டான்; காலைக் கடன்களை முடித்தான். அந்நேரத்தில் மலைத்தலைவன் வீட்டின் முன் நிற்கக் கண்டான். அடையாளம் இடுவதற்காக மண்வெட்டி

யொன்று எடுத்துக்கொண்டான். மலைத்தலைவனுடன் குன்றிற்குப் புறப்பட்டான். அக்குன்று உயர்ந் திருந்தது. அதன் உச்சியில் நின்று பார்த்தால் சுற்றிலுமுள்ள இடங்களைக் காணலாம். அங்கு நின்று கொண்டு தலைவன் முத்துவைப் பார்த்து, "இங்குப் பார்வைக்குத் தெரியும் அளவுள்ள நிலங் கள் அனைத்தும் எங்களுக்கே உரியன. நீங்கள் எவ்வளவு நிலம் வேண்டுமானாலும் உங்களுடையது ஆக்கிக் கொள்ளலாம்," என்றான். முத்து, மேடு பள்ளம் இல்லாத நல்ல வளமுள்ள பகுதியாகப் பார்த்துத் தேர்ந்தெடுத்தான். மலைத்தலைவனும் மலைவாழ் மக்களும் அங்கு அமர்ந்திருந்தனர். அப் போது மலைத்தலைவன் முத்துவைப் பார்த்து, "நண் பரே! இந்த இடம் தான் நீர் புறப்பட வேண்டிய இடம். மீண்டும் இந்த இடத்திற்கே கதிரவன் மறையுமுன் வந்து விடவேண்டும். அதற்குள் அடை யாளம் செய்யப்பட்ட நிலமனைத்தும் உங்களுக்கே சொந்தமாகிவிடும். எங்கே, ஆயிரம் ரூபாயைக் கொடுத்து விடுங்கள்," என்றான்.

தலைவன் சொற்படி முத்து ஆயிரம் ரூபாயைக் கொடுத்துவிட்டுப் புறப்படத் தொடங்கினான். நண்பகலுக்கு வேண்டிய உணவினை எடுத்துக் கொண்டான்; மண்வெட்டியைத் தோளில் சார்த்திக் கொண்டான்; புறப்பட்டுச் சென்றான். சுமார் ஆயிரம் மீட்டர் தூரம் நடந்ததும் ஒரு குழி வெட்டி னான்; மீண்டும் நடந்தான். வெகுதூரம் சென்று புறப்பட்ட இடத்தைத் திரும்பிப் பார்த்தான்.

குன்றும் மலைத்தலைவனும் குழுமியிருந்த மக்களும் அவனுக்கு நன்றாகத் தெரிந்தனர்.

ஆசைக்கு ஓர் அளவில்லையன்றோ! ஆதலால் முத்து நேராக நடந்து கொண்டிருந்தான். நண்பகல் வரவே புறப்பட்ட இடத்தைப் பார்த்தான். குன்று மட்டும் தெரிந்தது. அங்கு நின்ற மக்கள் தெரியவில்லை. அப்போது முத்து நின்ற பகுதி அவன் வந்துள்ள இடங்களை விட மிக்க வளமாகக் காணப்பட்டது. மனம் அடங்கவில்லை; மீண்டும் நேராக நடந்து சென்றான். சற்றுத் தொலைவு நடந்தவுடன் அங்கு ஓரடையாளம் வைத்துவிட்டு வலப்பக்கமாகத் திரும்பினான்.

ஆசையின் மிகுதியால் விரைவாக நடந்த முத்துவிற்குப் பசி யெடுத்தது. பொழுதும் நண்பகலைத் தாண்டி விட்டது. அவன் சோற்றுக் கட்டை அவிழ்த்துத் தின்றான். உணவு முடித்துக்கொண்ட அவன் ஓய்வு எடுத்துக்கொள்ளாது உடனே வடக்கு நோக்கி வந்த அளவு கிழக்காக நடந்தான். கதிரவன் கடுமையாகக் காய்ந்து கொண்டிருந்தான். அவனுக்கு உடல் வியர்த்தது; களைப்பும் அதிகரித்தது; சற்றுப் படுக்க வேண்டும்போல் இருந்தது. படுத்துவிட்டால் பெருமளவில் நிலத்தை வளைக்க முடியாது என அவன் நினைத்தான். எனவே, நிற்காது அவன் நடந்து கொண்டிருந்தான். மீண்டும் வலப்பக்கமாகத் திரும்பினால் சதுரமான நிலமாகக் கிடைக்கும். அதனால், அவ்வாறே அவன் திரும்பி நடந்தான்; அடையாளங்களும் நிலத்தில் வெட்டிக் கொண்டான்.

இறுதியில் தெற்காகப் புறப்பட்ட முத்து வால் விரைந்து நடக்க முடியவில்லை. வெயிலின் கொடுமை, நடந்த களைப்பு, பாதங்களில் கற்கள் அழுத்திய காயங்கள் அனைத்தும் அவனை மிகவும் வாட்டின; இருந்தாலும் பொழுது சாய்வதற்குள் புறப்பட்ட இடத்திற்குத் திரும்பிவிட வேண்டும் என்ற காரணத்தால் விரைவாக நடக்கலானன். சூரியன் விரைவாக ஓடுவதாக அவனுக்குத் தோன் றியது. குறிப்பிட்ட நேரத்திற்குள் எல்லையை அடைய முடியுமா என எண்ணினன். "ஐயோ, பேராசையினல் நெடுந்தூரம் வந்து விட்டேனே" என்று கூறிக் கொண்டான். பணமும், மிகுந்த உழைப்பும் பாழாகி விடுமே என்றெண்ணினன். தான் சுமந்து வந்த மண்வெட்டி, நீர்க்கலம், சட்டை முதலியவற்றை வீசி எறிந்தான்; தலைவனை நோக்கி ஓடத் தொடங்கினன்.

விதிக் கடவுளின் துன்பத்தால் ஏற்படும் சாவும் அவனுக்கு அச்சம் தரவில்லை. அவன் ஓடினன்; மேலும் மேலும் ஓடினன். அப்போது தலைவன் "ஓடிவா, ஓடிவா" என்று உரத்த குரலில் அழைப்பது அவன் காதுகளில் கேட்டது. இன்னும் சில மணித் துளிகளில் கதிரவன் மறைந்து விடுவான். "பெரிய அளவு வளமான நிலத்தை நான் வளைத்தேன். ஆனல் அதன் வளத்தினை நுகர நான் வாழ்வேன ?" என்றெண்ணியவாறு முத்து கைகளை வேகமாக வீசிக்கொண்டு வந்தான். குறிப்பிட்ட நேரத்தில் தலைவன் முன் தொப்பென்று குப்புற வீழ்ந்தான்.

மலைத்தலைவன் அவனைப் பெரிதும் பாராட்டினான். அவ்வுரைகளைக் கேட்டும் முத்து எழுந்திருக்கவில்லை. ஓடிவந்த களைப்பின் மிகுதியால் படுத்திருப்பதாக அங்குக் குழுமியிருந்தோர் எண்ணினர். மலைவாழ் மக்கள் அவனுக்குத் தொல்லை கொடுக்கவில்லை. சிறிது நேரம் சென்றது. முத்து எழுந்திருக்கவில்லை. அவன் உடன் வந்த பணியாள் அவனைப் புரட்டிப் பார்த்தான். பாவம்! முத்து உயிருடன் இல்லை. அவன் வெற்றி பெறுதற்கரியது. ஆனல் அதனைவிடப் பெரிதாயிருந்தது விதியின் வலிமை. இனி, மக்களும் தலைவனும் அவனுக்கென்ன தரமுடியும்? முத்துவின் பணியாட்கள் மண்வெட்டி எடுத்து அவனைப் புதைக்கக் குழி தோண்டினர். அப்போது அவனுக்குத் தேவைப்பட்டது "ஆறடி நிலமே" அன்றோ!

---

# 5. வெனிஸ் வணிகன்

ஐரோப்பாக் கண்டத்தில் இத்தாலி என்றொரு நாடு உண்டு. அந்நாட்டில் வெனிஸ் என்பது புகழ் பெற்ற பெரு நகரம். அந்நகரத்தில் ஷைலக் என்னும் பெயருடைய வணிகன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் இரக்கமற்ற மனங்கொண்டவன்; வட்டிக்கு வட்டி வாங்கும் வன்னெஞ்சன். அவனிடம் கடன் வாங்கியவர்கள் அவனுடைய வஞ்சக வலையி லிருந்து தப்ப முடியாது; தம் சொத்து முழுவதையும் அவனுக்கே கொடுத்து ஆண்டியாவார்கள். அங்ஙனம் பொருள் சேர்த்த அவ்வணிகன் அளவு கடந்த செல் வத்திற்கு அதிபதியானான். ஆனால் அவன் இன்ப மான வாழ்க்கை நடத்தவில்லை. தானும் உண்ண மாட்டான்; பிறருக்கும் கொடுக்க மாட்டான். பேராசை கொண்டிருந்த அவ்வணிகனை வெனிஸ் நகர மக்களனைவரும் வெறுத்தனர்.

அந்நகரில் அந்தோனியோ என்று மற்றொரு வணிகன் இருந்தான். அவன் கிறித்தவன்; அனை வரிடமும் அன்புடையவன். பிறருடைய துன்பத் தைக் கண்டு பேருதவி புரியும் பெருங்குணம் கொண் டவன். தான் கடனாகக் கொடுத்த பணத்திற்கு வட்டி வாங்கமாட்டான்; மற்றவரிடம் முகமலர்ச்சியுடன் இன்சொல் பேசிப் பழகுவான். அத்தகைய அரும் பண்புகளமையப் பெற்ற அந்தோனியோவை

அந்நகரத்து மக்களனைவரும் போற்றினார்கள். அவன் புகழ் எங்கும் பரவியது.

வெனிஸ் நகர மக்கள் தன்னை இகழ்வதையும், அந்தோனியோவைப் புகழ்வதையும் கேட்டு ஷைலக் அந்தோனியோவிடம் மிகுந்த பொறாமை கொண்டான். அந்தோனியோ தன்னைப் பற்றிக் கேலியாகப் பேசுவதைக் கேள்விப்பட்ட ஷைலக், அவனிடம் தீராத பகையுங் கொண்டான். ஷைலக் தன் பகையுணர்ச்சியை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. அந்தோனியோவைச் சமயம் வரும்போது பழிவாங்க எண்ணியிருந்தான்.

அந்தோனியோவுக்குப் பஸானியோ என்றொரு நண்பன் இருந்தான். அவன் உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவன்; நற்குணங்களுடையவன். அவன் தனக்குப் பொருள் தேவைப்படும்போதெல்லாம் அந்தோனியோவின் உதவியை நாடுவான். அந்தோனியோவும் தன் உயிர்த்தோழனாகிய பஸானியோவுக்குப் பொருள் கொடுத்து உதவுவான்.

வெனிஸ் நகருக்கருகில் பெல்மாண்டு என்னும் ஓர் ஊர் இருந்தது. அவ்வூரில் செல்வக் குடியிலே பிறந்த, அழகு மிகுந்த குமரிப்பெண் ஒருத்தி வாழ்ந்து வந்தாள். அவளுடைய பெயர் போர்ஷியா. அவள் தந்தையை இழந்தவள். தன்னுடைய செல்வமனைத்திற்கும் உரியவளாக அவள் ஒருத்தியே விளங்கினாள். எனவே, அவளைப் பல இளைஞர்கள்

மணக்கப் போட்டி யிட்டனர். பஸானியோவும் அவளை மணக்க விரும்பினன். அவனுடைய அருங் குணங்களை அறிந்த போர்ஷியாவும் அவனை விரும்பினள்.

போர்ஷியோவின் தகுதிக்கு ஏற்பத் தன்னிடம் செல்வம் இல்லையே என்று பஸானியோவின் உள்ளத்தில் ஓர் எண்ணம் எழுந்தது. எவ்வாறேனும் அவளை மணக்க வேண்டுமென்று அவன் உறுதி கொண்டான். உடனே தன் உயிர்த்தோழன் அந்தோனியோவிடம் சென்ருன். அவனிடம் தன் விருப்பத்தையும், மனக்கவலையையும் பஸானியோ தெரிவித்தான்; தனக்கு உதவிபுரிய வேண்டுமென வேண்டிக் கொண்டான்.

அந்தோனியோ தன் நண்பனின் நிலையை அறிந்து மனம் இரங்கினன்; எவ்வகையிலும் தன் நண்பனுக்கு உதவி புரியவேண்டுமென விரும்பினன். ஆனல், அச்சமயத்தில் அந்தோனியோவிடம் பணம் இல்லை. அவனுடைய சரக்குக் கப்பல்கள் அயல் நாடுகளுக்குச் சென்றிருந்தன. அக்கப்பல்கள் சரக்குகளை விற்றுத் திரும்பி வந்தால் அவனிடம் அளவு கடந்த செல்வம் குவியும். அதுவரை தன் நண்பனைக் காத்திருக்குமாறு செய்ய அவன் மனம் இடந்தரவில்லை. பஸானியோவின் திருமணத்தை விரைவில் முடித்து வைக்க அவன் நினைத்தான். அதனல் யாரிடமாவது கடன் வாங்கியேனும் தன் நண்பனுக்கு உதவ முடிவு செய்தான்.

எண்ணிய நேரத்தில் பெருந் தொகையைக் கடன்தரக் கூடியவர்கள் ஷைலக்கைத் தவிர வேறு எவரும் அந்நகரில் இல்லை. அதனால் அவனிடமே சென்று கடன் கேட்பது என்று அந்தோனியோ விரும்பினான். அதற்குப் பஸானியோ இசைய வில்லை; வஞ்சக எண்ணங்கொண்ட ஷைலக் வலையில் சிக்கக் கூடாதென உரைத்தான். ஆனால் அந்தோனியோ அதை ஏற்றுக்கொள்ளவில்லை. "ஷைலக் நம்மை என்ன செய்துவிட முடியும்? அதிக வட்டி கேட்கப் போகிறான்; அவ்வளவு தானே! என்னுடைய கப்பல்கள் வந்தவுடன் அவனிடம் பெறும் கடனை வட்டியுடன் கொடுத்து விடலாம்", என்று பஸானியோவிற்கு ஆறுதல் கூறினான்; அவனையும் அழைத்துக்கொண்டு ஷைலக்கிடம் சென்றான்.

ஷைலக் அந்தோனியோ தம்மிடம் வந்ததைக் கண்டு வியப்புற்று, வந்த காரியம் என்னவென்று கேட்டான். அந்தோனியோ "எனக்கு மூவாயிரம் பொன் தேவையாகவுள்ளது; கடனாகக் கொடு; வட்டி எவ்வளவு வேண்டுமானாலும் தருகிறேன்", என்றான். ஷைலக் தான் எதிர் பார்த்திருந்த தருணம் தானாக வந்திருப்பதை எண்ணி மிகுந்த மகிழ்வெய்தினான். அந்தோனியோவை எவ்வாறு பழி வாங்குவதென்று சிந்தித்துக் கொண் டிருந்தான். அவனுடைய சிந்தனையைக் கண்ட அந்தோனியோ "என்ன, ஷைலக் பணம் கொடுக்க மனமில்லையா?" என்று கோபத்துடன் கேட்டான்.

அது கேட்ட ஷைலக், "அந்தோனியோ! பணம் கொடுப்பதைப் பற்றிச் சிந்திக்கவில்லை. என்னை நீ பலவாறு பழித்துப் பேசியவன்; உனக்கு நான் உதவி செய்யலாமா எனச் சிந்திக்கின்றேன்," என்றான்.

அந்தோனியோ மிகவும் கோபங் கொண்டான். "நீ என்னை நண்பனென்று எண்ணிக் கடன் கொடுக்க வேண்டாம். உன் பகைவன் என்று எண்ணியே கொடு," என்றான். ஷைலக் உடனே வஞ்சகமாக உரையாடத் தொடங்கினன். "அந்தோ னியோ! உன் நண்பனுக இருந்தே உனக்கு உதவி செய்ய விரும்புகின்றேன். நீ கேட்ட மூவாயிரம் பொன்னும் இப்போதே தருகிறேன். குறித்த தவணைக்குள் கடனைத் திருப்பித் தராவிட்டால் உன் உடலில் நான் விரும்பும் பகுதியிலிருந்து ஒரு பவுண்டு தசையை அறுத்து எடுத்துக்கொள்ள நீ ஒப்புதல் பத்திரம் எழுதிக்கொடுக்க வேண்டும்," என்று கூறினன். அதைக் கேட்ட பஸானியோ திடுக்கிட் டான். அப்போது ஷைலக் சிரித்துக்கொண்டே "நான் கூறும் இந்த ஒப்பந்தம் விளையாட்டுக்காகத் தான். தசையை வைத்துக்கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்?" என்றான். தன் கப்பல்கள் உரிய காலத்தில் திரும்பிவிடுமென்றும், கடனைக் குறித்த காலத்துக்கு முன்னதாகவே கொடுத்து விடலாம் என்றும் அந்தோனியோ உறுதியாக நம்பினன். அவன் பஸானியோவிடம், "நண்ப!

நீ ஏன் அஞ்சுகிறாய்? பணத்தை உரிய காலத்தில் உறுதியாகக் கொடுத்து விடலாம்,” என்றான்.

உடனே, அந்தோனியோ ஷைலக்கினுடைய விருப்பப்படியே ஒப்பந்தம் எழுதிக்கொடுத்து, மூவாயிரம் பொன்னைக் கடனாக வாங்கிப் பஸானியோவிடம் கொடுத்தான்.

நண்பன் கொடுத்த பணத்தைப் பஸானியோ பெற்றுக்கொண்டான். அதைக் கொண்டு தனக்குத் தேவையான பொருள்கள் அனைத்தையும் வாங்கினான்; நல்ல ஆடைகளை அணிந்து கொண்டான். அந்தோனியாவிடம் விடை பெற்றுப் போர்ஷியா வாழும் பெல்மாண்டு நகர் நோக்கிச் சென்றான்.

போர்ஷியா, அழகும் செல்வமும் ஒருங்கே வாய்ந்தவள். அதனால், செல்வம் மிகுந்த இளைஞர் பலர் அவளை மணந்து வாழ விரும்பினர். போர்ஷியா அழகில் சிறந்த பஸானியோவை மணக்க விரும்பினாள். ஆனால் அவள் தந்தையோ பண்பிற் சிறந்த நல்லவனையே தேர்ந்தெடுக்க ஒரு வழி அமைத்திருந்தார். அதன்படி மூன்று பெட்டிகளை வைத்தார். அவற்றுள் வெவ்வேறு பொருட்களையும் வைத்தார். சரியான பெட்டியைத் தேர்ந்தெடுத்துத் திறப்பவரே போர்ஷியாவை மணக்க முடியும். பஸானியோ வந்து சரியான பெட்டியைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என, போர்ஷியா எண்ணிக் கொண்டிருந்தாள்.

பஸானியோ பெல்மாண்டுக்கு வருமுன்பு, ஆப்பிரிக்காவிலிருந்து இளவரசன் ஒருவன் வந்தான். அவன் போர்ஷியாவை மணக்க விரும்பினான். அதனால் பெட்டிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கச் சென்றான். பொன், வெள்ளி, ஈயம் ஆகியவற்றால் ஆன பெட்டிகளில், பொன் பெட்டியின் அருகில் சென்றான். அதில் 'என்னைத் தேர்ந்தெடுப்பவன் பல ஆடவர் விரும்பும் பொருளைப் பெறுவான்' என்று எழுதப்பட்டிருந்தது. வெள்ளிப் பெட்டியின் மீது 'என்னைத் தேர்ந்தெடுப்பவன் எதனைப் பெறத் தகுதியுடையவனோ அதனை அடைவான்" என்று எழுதப்பட்டிருந்தது. ஈயப்பெட்டியின் மீது 'என்னைத் தேர்ந்தெடுப்பவன் தன்னிடமுள்ளவற்றை இழக்கவும், தியாகம் செய்யவும் துணிவுடையனாதல் வேண்டும்' என்று எழுதப்பட்டிருந்தது.

ஆப்பிரிக்க நாட்டு இளவரசன் பொன்னாலான பெட்டியை நீண்ட நேரம் பார்த்தான். பலர் விரும்பும் பொருள் யாதாக இருக்கலாம் எனச் சிந்தித்தான். போர்ஷியாவைப் பலரும் விரும்புவர். இப்பெட்டியினுள் அவள் படம் தான் இருக்கவேண்டும் என்று கூறிப் பெட்டியைத் திறந்தான். ஆனால் அதனுள் இருந்த பொருள் அவனைத் திடுக்கிடச் செய்தது. அச்சம் தரும் மண்டையோடு ஒன்று அதனுள் இருந்தது. அதனுடன் "மின்னுவதெல்லாம் பொன்னல்ல. நீ போர்ஷியாவுக்கு ஏற்றவனல்லன்; நீ போகலாம்", என்று எழுதப்பட்ட தாளும் இருந்தது.

அதனைப் படித்த இளவரசன் மிகவும் வெட்கப் பட்டான்; தன் நாட்டிற்குத் திரும்பினன்.

பின்னர், பிரெஞ்சு நாட்டு இளவரசன் ஒருவன் வந்தான். அவன் தற்பெருமை மிக்கவன். 'பெட்டி களைப் பார்த்துத் தேர்ந்தெடுக்கச் சென்றான். வெள்ளிப் பெட்டியும், அதன்மீது காணப்பட்ட சொற் களும் அவனைக் கவர்ந்தன. "நானே போர்ஷி யாவை மணந்து கொள்ளத் தகுதி யுடையவன்", என்று கூறிக்கொண்டு வெள்ளிப் பெட்டியைத் திறந் தான். அதனுள் நகைப்பிற்குரிய உருவப்படம் ஒன்றிருந்தது. அதனுடன் "தற்பெருமை யுடையவர் இவ்வுலகில் பலருண்டு; அவருள் நீ ஒருவன்; உடனே இவ்விடத்தை விட்டு நீங்குக," என்று எழுதப்பட்ட தாளும் இருந்தது. பிரெஞ்சு நாட்டரசன் வெட்க முற்றுத் தன் நாட்டிற்குச் சென்று விட்டான்.

பஸானியோ, பின்னர் அங்கு வந்து சேர்ந்தான். போர்ஷியா அவனைக்கண்டு மகிழ்ந்தாள்; நல்ல முறையில் வரவேற்றாள். சரியான பெட்டியைத் தேர்ந்தெடுக்கும்படி கூறிவிட்டு அங்கிருந்து சென் றாள். அவன் பெட்டிகளைப் பார்த்தான். அவற்றின் மீது எழுதப்பட்டுள்ளவற்றைப் படித்தான். வெளித் தோற்றத்தைக் கண்டு ஏமாந்து விடக்கூடாது. அதனால் ஈயப் பெட்டியைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று முடிவு செய்தான். அப்பெட்டியைத் திறந் தான். அதனுள் போர்ஷியாவின் அழகிய படமொன் றிருந்தது. அதனுடன் 'வெளித் தோற்றத்தால்

நீ மயங்கவில்லை. சரியாகத் தேர்ந்தெடுத்த படியால் போர்ஷியா உன் இல்வாழ்க்கைத் துணைவி யாவாள்," என்று எழுதப்பட்டிருந்த தாளும் இருந்தது. பஸானியோ, போர்ஷியாவை மணந்து கொண்டான். இருவரும் பெல்மாண்டில் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தனர்.

ஒருநாள் பஸானியோவுக்கு ஒரு கடிதம்வந்தது. அக்கடிதத்தைப் பிரித்துப் படித்தவுடன் அவன் கண்கள் கலங்கின. அதைக் கண்ட அவன் மனைவி நடுக்கமுற்றாள். கடிதத்திலுள்ள செய்தியைப்பற்றிக் கவலையுடன் தன் கணவனைக் கேட்டாள். அதற்குப் பஸானியோ, "நம் திருமணத்தின் செலவிற்காக என் நண்பன் அந்தோனியோவின் உதவியை நான் நாடினேன். அவனிடம் அச்சமயத்தில் பணம் இல்லை. எனவே, ஷைலக் என்னும் கொடியவனிடம் மூவாயிரம் பொன் கடனாக வாங்கித்தந்தான். குறித்த தவணைக்குள் பணத்தைத் திருப்பித் தரவில்லையென்றால் என் நண்பனின் உடலிலிருந்து ஒரு பவுண்டு தசையை அறுத்தெடுத்துக் கொள்ளலாம் என்பது நிபந்தனை. தவணை தவறிவிட்டது; ஷைலக் நீதி மன்றத்தில் வழக்குத் தொடர்ந்துள்ளான். என் இன்ப வாழ்விற்காக என் அருமை நண்பனை இழக்க நேர்ந்து விட்டதே," என்று கூறி அழுதான்.

போர்ஷியா அவனுக்கு ஆறுதல் கூறினாள். "என் பொருட்களனைத்தும் உங்களுடையதுதானே. எவ்வளவு பொருள் வேண்டுமானாலும் எடுத்துச்

செல்லுங்கள். தங்கள் நண்பரைக் காப்பாற்றுங்கள்", என்று அன்புடன் கூறினாள். உடனே பஸானியோ பெரும் பொருளுடன் வெனிஸ் வந்தடைந்தான். ஷைலக்கைக் கண்டான்; "உன் பணத்தை வட்டியுடன் வாங்கிக்கொள்", என்று வேண்டினான்.

ஷைலக் அதற்கு ஒப்பவில்லை. தவணை தவறி விட்டதால் ஒப்பந்தத்தில் உள்ளவாறு நடக்க வேண்டியதுதான் என்று இரக்கமின்றிக் கூறிவிட்டான். வாங்கிய அளவுக்கு மும்மடங்கு பொன் கொடுப்பதாகப் பஸானியோ மன்றாடிக் கேட்டான். வஞ்சகனான ஷைலக் அதற்கும் இசையவில்லை. பஸானியோ என்ன செய்வதென்றறியாமல் மனங் கலங்கினான்.

வழக்கு நீதி மன்றத்தில் மன்னர் முன் வந்தது. அந்தோனியோ எழுதித் தந்துள்ள ஒப்பந்தத்தின் படி அவன் உடலிலிருந்து ஒரு பவுண்டு தசையைத் தான் அறுத்து எடுத்துக்கொள்ள அனுமதி தர வேண்டுமென்று ஷைலக் வாதாடினான்.

தன் நண்பன் அந்தோனியோ வாங்கிய தொகையைப் போன்று மும்மடங்குப் பணம் தரத் தயாராக இருப்பதாகப் பஸானியோ மன்னரிடம் கூறினான். ஷைலக் அதை ஏற்றுக்கொள்ளவில்லை.

அப்போது இளம் வயதுடைய ஒரு வழக்கறிஞர் நீதிமன்றத்திற்குள் நுழைந்தார். அறிமுகக்

கடிதம் ஒன்றை மன்னரிடம் கொடுத்தார்; அந்தோனியோவின் சார்பாகத் தான் வாதாட வந்திருப்பதாகக் கூறினர். அம்மன்னரும் அவ்வழக்கறிஞருக்கு அனுமதி வழங்கினர். பஸானியோ அளவற்ற மகிழ்ச்சி கொண்டான்.

**வழக்கறிஞர் :** (ஷைலக்கைப் பார்த்து) உங்கள் பெயர் என்ன ?

**ஷைலக் :** என் பெயர் ஷைலக்.

**வழக்கறிஞர் :** உங்களுடைய தொழில்.

**ஷைலக் :** நான் இந்நகரத்திலேயே பெரிய வணிகன். வட்டிக்குக் கடன் கொடுப்பது வழக்கம்.

**வழக்கறிஞர் :** சரி. அந்தோனியோ உங்களிடம் வாங்கிய தொகை எவ்வளவு ?

**ஷைலக் :** மூவாயிரம் பொன்.

**வழக்கறிஞர் :** அத்தொகையை வட்டியுடன் கொடுத்தால் இப்போது வாங்கிக்கொள்வீரா ?

**ஷைலக் :** முடியாது; தவணை கடந்துவிட்டது. அந்தோனியோவின் ஒப்பந்தத்தின்படி அவனுடைய உடலிலிருந்து ஒரு பவுண்டு தசையை நான் விரும்பும் இடத்திலிருந்து அரிந்து எடுத்துக் கொள்ளவே விரும்புகின்றேன்.

**வழக்கறிஞர் :** எங்கே ஒப்பந்தப் பத்திரத்தைக் காட்டுங்கள், பார்ப்போம்.

(ஷைலக் பத்திரத்தை வழக்கறிஞரிடம் கொடுக்கின்றான்; வழக்கறிஞர் பத்திரத்தை வாங்கிப் படித்துவிட்டு அதை நீதிபதியிடம் கொடுக்கின்றார்.)

வழக்கறிஞர்: ஒப்பந்தத்தில் கண்டவாறு நடந்து கொள்வதுதான் நியாயம். "அந்தோனியோ தன் உடலிலிருந்து ஒரு பவுண்டு தசையை ஷைலக் அறுத்து எடுத்துக்கொள்ள இசைய வேண்டுவதுதான் முறை.

(இதைக்கண்ட ஷைலக் துள்ளிக் குதித்தான். பஸானியோ திடுக்கிட்டுக் கண்ணீர் சிந்தினான். அந்தோனியோ எதற்கும் கவலைப்படாமல் இருந்தான்.)

வழக்கறிஞர்: ஷைலக்! ஒப்பந்தப்படி நடக்கத்தான் வேண்டுமா? சிறிதளவு கருணை காட்டக் கூடாதா? சட்டம் உங்களுக்குச் சாதகமாக உள்ளது; ஆனால் மனிதப் பண்புடன் சற்று இரக்கம் காட்டிப் பணத்தை வாங்கிக்கொள்ள மாட்டீர்களா?

ஷைலக்: முடியாது. சட்டப்படி நீதிவழங்க வேண்டுகிறேன். நான் ஒப்பந்தத்தில் உள்ளவாறு அந்தோனியாவின் உடலிலிருந்து, அதாவது எனக்கு விருப்பமான இடமாகிய மார்பிலிருந்து, தசையை அறுத்துக்கொள்ள விரும்புகின்றேன்.

வழக்கறிஞர்: அப்படியானால் உங்கள் விருப்பப் படியே செய்யலாம். ஆனால் ஒரு நிபந்தனை.

**ஷைலக் :** என்ன அது ?

**வழக்கறிஞர் :** ஷைலக்! நீங்கள் அறுத்து எடுக்கும் தசையை நிறுத்து நிறுப்பதற்காகத் தராசு கொண்டு வந்துள்ளீர்களா ?

**ஷைலக் :** கொண்டுவந்துள்ளேன்.

**வழக்கறிஞர் :** மருத்துவர் உள்ளாரா ?

**ஷைலக் :** எதற்காக?

**வழக்கறிஞர் :** பாவம்! அந்தோனியோவை நீங்கள் அறுக்கும்போது இரத்தங் கொட்டி இறக்க நேர்ந்தால் என்ன செய்வது?

**ஷைலக் :** அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. ஒப்பந்தத்தில் அவ்வாறு எழுதப்படவில்லையே!

**வழக்கறிஞர் :** ஒப்பந்தத்தில் இல்லை. மனிதப் பண்பினல் ஏற்றுக் கொள்வீர்கள் என எண்ணினேன். நீங்கள் விரும்பவில்லையென்றுல் சரி. உங்கள் விருப்பப்படி அந்தோனியோவின் மார்பிலிருந்து ஒரு பவுண்டு தசையை அறுத்து எடுத்துக் கொள்ளலாம். ஆனல் ஒரு பவுண்டுக்குக் கூடவோ குறையவோ கூடாது. சரியாக ஒரு பவுண்டு தசையை மட்டுமே அறுக்கவேண்டும்.

(இதைக் கேட்ட ஷைலக் சிறிது தயங்கினன்.)

**ஷைலக் :** சரி......(என்று கூறிக் கையில் கத்தியுடன் அந்தோனியோவை நெருங்கினன்.

(வழக்கறிஞர் மீண்டும்)

**வழக்கறிஞர் :** ஷைலக், நில்லுங்கள் ; அவசரப்படாதீர்கள் ; ஒரு பவுண்டு தசையை மட்டுமே அறுத்து எடுத்துக் கொள்ளலாமென்று ஒப்பந்தத்தில் உள்ளது. ஆனால் தசையை அறுத்தெடுக்கும் போது அந்தோனியோவின் மார்பிலிருந்து ஒரு துளி இரத்தம் கூடச் சிந்தக்கூடாது. அப்படிச் சிந்தினால் அவரைக் கொல்ல முயன்ற குற்றத்திற்காக உங்களுக்கு மரண தண்டனை விதிக்க இடமுண்டு ; உங்களுடைய பொருட்களனைத்தும் பறிமுதல் செய்யவும் சட்டமுள்ளது.

வழக்கறிஞர் கூறியதைக் கேட்ட ஷைலக் திடுக்கிட்டான். அவனுடல் ஆட்டங்கண்டது. "ஐயா, எனக்கு அந்தோனியோவின் தசை வேண்டாம் ; பணத்தைக் கொடுங்கள்", என்றான். பஸானியோ பணத்துடன் ஓடி வந்தான். ஆனால் வழக்கறிஞர் "பணம் தரமுடியாது. ஒப்பந்தத்தில் உள்ளவாறு தான் நடந்துகொள்ள வேண்டும். தசையை அரிந்து கொள்ளுங்கள்", என்றார்.

ஷைலக் செய்வதறியாது விழித்தான் ; "சரி ; எனக்குப் பணமும் வேண்டாம். தசையும் வேண்டாம். நான் செல்கிறேன்", என்று கூறிப் புறப்பட்டான்.

வழக்கறிஞர் "ஷைலக் ! போகாதீர்கள்" உங்களுடைய பொருட்களனைத்தும் பறிமுதல் செய்யப்பட்டுள்ளன. நீங்கள் அந்தோனியோவைச் சூழ்ச்சி செய்து கொல்ல முயன்றதாக உங்கள்மீது குற்றஞ்

சாட்டுகின்றேன். ஒருவனை வஞ்சனை செய்து கொல்ல முயல்பவர்க்கு மரணதண்டனை விதிக்கப்படுமென்பதே வெனிஸ் நகரச்சட்டம்; "நீங்கள் மரண தண்டனையிலிருந்து தப்ப வேண்டுமானல் மன்னரிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுங்கள்," என்ருர்.

வழக்கறிஞரின் திறமையைக் கண்டு அனைவரும் புகழ்ந்தனர். 'பஸானியோ மகிழ்ச்சிக் கண்ணீர் சொரிந்தான். அந்தோனியோ இறைவனின் கருணையை எண்ணி மனமுருகினன். ஷைலக் நடுக்க முற்ருன்; மன்னர் முன் வீழ்ந்து ம்ன்னிப்பு வேண்டினன்.

மன்னர், "ஷைலக், நீ மனிதப் பண்பில்லாதவனயிருப்பினும் உன்னை மன்னிக்கின்றேன்; ஆனல் உன் பொருட்களனைத்தும் பறிமுதல் செய்யப்பட்டுள்ளன; அவை இந்நாட்டுச் சட்ட முறைப்படி பாதிப் பகுதி அரசாங்கத்திற்குச் சேரும்; பாதி அந்தோனியோவிற்குச் சேரும்," என்று தீர்ப்பு வழங்கினர்.

அந்தோனியோ அச்செல்வத்தைத் தான் பெறுவதற்கு விருப்பமின்றி ஷைலக்கினல் வெறுத்து ஒதுக்கப்பட்ட அவனுடைய மகளுக்கு அளித்தான்.

நீதி மன்றம் கலைந்தது. பஸானியோ தன் ஆருயிர் நண்பனைக் காத்தருளிய வழக்கறிஞருக்கு நன்றி செலுத்தி அவருக்குப் பெரும்பொருள் வழங்க

முன் வந்தான். ஆனால் வழக்கறிஞர் அதைப் பெற வில்லை; அவன் அணிந்திருந்த மோதிரத்தைப் பரிசாக அளிக்குமாறு கேட்டார். அம்மோதிரம் பஸானியோவிற்கு அவன் மனைவியால் திருமண அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது. அதனைக் கொடுப்பதற்கு அவன் சிறிது தயங்கினான். ஆனால் தன் நண்பனின் உயிரைக்காத்த வழக்கறிஞரின் உதவியை எண்ணிப் பார்த்தான்; உடனே அவன் தன் மோதிரத்தை வழக்கறிஞரிடம் கொடுத்து விட்டான். பிறகு அவ்வழக்கறிஞர் அவர்களிடம் விடை பெற்றுச் சென்று விட்டார்.

பஸானியோ, தன் நண்பன் அந்தோனியோவை அழைத்துக் கொண்டு போர்ஷியாவிடம் வந்தான். போர்ஷியா அவர்களை அன்புடன் வரவேற்றாள்; நீதி மன்றத்தில் நடந்த நிகழ்ச்சிகளை எல்லாம் கேட்டறிந்தாள். வழக்கறிஞரின் திறமையை அவளும் பாராட்டினாள்.

பஸானியோவிற்குத் தான் அன்புடன் அளித்த மோதிரத்தை அவன் வழக்கறிஞருக்குக் கொடுத்ததை யறிந்த போர்ஷியா தன் கணவனிடம் கோபித்துக்கொண்டாள். இதைக்கண்டு அந்தோனியோ மிகவும் வருந்தினான். தன் நண்பனின் மனைவிக்கு ஆறுதல் கூறினான். அதனைக் கேட்ட போர்ஷியா அம்மோதிரத்தைக் காட்டி அதனை மீண்டும் தன் கணவரிடம் கொடுத்தாள். மோதிரத்தைக் கண்ட பஸானியோ, அந்தோனியோ இருவரும் வியப்படைந்

தனர். "வழக்கறிஞரிடம் கொடுத்த அம்மோதிரம் உன்னிடம் எவ்வாறு வந்தது?" என்று பஸானியோ கேட்டான். உடனே போர்ஷியா தனக்குத் தெரிந்த வழக்கறிஞர் ஒருவரின் துணையினல் தானே வழக்கறிஞர் வேடந் தாங்கி நீதிமன்றம் வந்து வழக்காடி வென்றதை விளக்கமாகக் கூறினள். அதனைக் கேட்ட பஸானியோவும் அந்தோனியோவும் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அவர்கள் போர்ஷியாவினுடைய திறமையைப் பாராட்டினர்கள்.

---

# 6. சிறந்த நட்பினர்

மக்கள் ஒருவரோடு ஒருவர் பேசிப் பழகி நட்புடன் வாழ்கின்றனர். நல்லோர் நட்பு வளர் பிறைபோல வளரும். நட்புக்கொண்ட இருவரும் மனம் கலந்து பழகுவர். ஒருவருடைய இன்ப துன்பங் களில் மற்றொருவரும் பங்கு கொண்டு வாழும் அன்பு உணர்ச்சியே சிறந்த நட்பு எனப்படும்.

இந் நட்பு துன்பத்தைப் பாதியாக்கும்; இன் பத்தை இருமடங்காக்கும்; மனநோயைப் போக்கும்; தவறு செய்யும் காலத்து அறிவுரை கூறும்; துன்பம் நேரும்பொழுது விரைந்துவந்து உதவும். உயர் நண்பனுக்குரிய பண்புகள் இவைகளே ஆகும். இத்தகைய சிறந்த நண்பரைத் தேர்ந்தெடுக்கும் போது விழிப்பாக இருக்கவேண்டும். கொல்லன் உலைக்களத்தில் நெருப்பினிடையே உருகும் இரும் பைத் திருப்ப உதவும் கோல் சூட்டுக் கோல் எனப் படும். அக்கோல் இரும்பைத் திருப்பத் தானும் நெருப்பினுள் புகுவதைப் போல, நல்லோர் தம் நண்பர் பொருட்டு எத்தகைய துன்பத்தையும் ஏற்க முன் வருவர்.

பலமுறை கண்டு மனமொத்துப் பழகியவர்கள் சிறந்த நட்பினராகலாம். ஒரே ஊரைச் சார்ந்தவர் களாக இருப்பவர்களும் சிறந்த நட்பினராகத் திகழ லாம். ஆனால் ஒருவருக் கொருவர் நெடுந்தொலைவில்

இருந்தும், ஒரு முறை கூடக் கண்டு பழகாமலிருந்தும், சிறந்த நட்பினர்களாக விளங்கிய இருவரைப் பற்றித் தமிழ் இலக்கியங்கள் கூறுகின்றன. அவர்களைப்பற்றி அறிந்துகொள்வோம்.

பாண்டிய நாட்டில் முன்பு பிசிர் என்ற சிற்றூர் ஒன்று இருந்தது. கடற்கரையில் அமைந்த அவ்வூர் இயற்கை அழகுடன் விளங்கியது. அவ்வூரில் பழம் பெருமை வாய்ந்த குடிமக்கள் பலர் வசித்து வந்தனர். வேளாளர் குடியொன்றில் ஆந்தையார் என்ற தமிழ்ப் புலவர் ஒருவர் தோன்றினர். ஆதன் தந்தை என்ற பெயரே ஆந்தையார் எனவாயிற்று. ஊரின் பெயரையும் சேர்த்து அவரை மக்கள் பிசிராந்தையார் என்றே அழைத்து வந்தனர்.

பிசிராந்தையார் கல்வியில் சிறந்தவர்; அடக்கமும் பொறுமையும் வாய்ந்தவர்; உழவுத்தொழிலைச் செய்து வாழ்ந்து வந்தார். மக்கள் அவரை நன்கு மதித்து வந்தனர். அவர் மனைவியும் நல்ல இயல்புகளை உடையவள். அவருடைய நன்மக்கள், தாய் தந்தையரைப் போலவே அறிவிலும் ஆற்றலிலும் சிறந்தவர்கள். பிசிராந்தையார் கவலையின்றி வாழ்ந்தார். அதனல் அவர் மாருத இளமையும், உடல் உரமும், சுறுசுறுப்பும் வாய்ந்தவராகக் காணப்பட்டார்.

பிசிராந்தையார் பாண்டிய நாட்டில் வாழ்ந்த போது சோழ நாட்டைக் கோப்பெருஞ் சோழன்

என்னும் மன்னன் ஆண்டு வந்தான். அவன் சிறந்த தமிழ்ப் புலவன். சொல் அழகும், பொருள் இனிமையும் அமைந்த பாடல்களை இயற்றும் திறமை உடையவன். அவன் தன்னை நாடி வரும் புலவர்களுக்குத் தகுந்தபடி பொன்னும், பொருளும் வழங்கி மகிழ்வான். அவன் அவைக்குப் புலவர்கள் வந்த வண்ணமாகவே இருப்பர். தமிழ்ப் புலவர்கள் பலர் அவனுடன் நட்புக்கொண்டு அங்கேயே தங்கி மகிழ்ந்தனர்.

ஒரு நாள் பாண்டிய நாட்டிலிருந்து ஒரு தமிழ்ப் புலவர் சோழனைக் காணவந்தார். அரசனுடைய உயர்ந்த குணங்களைக் கண்ட புலவர் மிகுந்த மகிழ்ச்சி கொண்டார். கோப்பெருஞ்சோழன் அவர் வாயிலாகப் பிசிராந்தையாரின் பெருமையை அறிந்தான். அவரைக் காணவேண்டும் என்றும், பேசி மகிழ வேண்டுமென்றும் நினைத்தான்; ஒவ்வொரு நாளும் புலவரைக் காண்பது எந்நாளோ என்று எண்ணிக் கொண்டிருந்தான். புலவரைக் காணமலே அவர்மீது அவன் அன்பு செலுத்தினன். அன்பு பெரு நட்பாக மலர்ந்தது.

இங்ஙனமே பிசிராந்தையாரும், சோழ அரசனின் அருங்குணங்களைப் புலவர்கள் கூறக் கேட்டுணர்ந்தார். அம்மன்னனைக் காணவேண்டும், அவன் பேசும் இனிய மொழிகளைக் கேட்கவேண்டும் என்ற ஏக்கம் ஒவ்வொரு நாளும் அவருக்கு வளர்ந்து வந்தது. ஆனல், வெகு தூரத்தில் வாழ்ந்த காரணத்

தால் அஃது இயலாமற் போயிற்று, அவர் சோழ நாட்டிலிருந்து வருபவர்களிடத்தில் மன்னனைப் பற்றிக் கேட்பார்; அவன் நலத்தைப்பற்றி வினவு வார். ஒருவரை ஒருவர் காணாமலும், பழகாமலும் அவர்கள் கொண்ட இந்த நட்பின் ஆற்றலை என்ன வென்று புகழ்வது!

இவர்கள் நட்பு இவ்வாறு வளர்ந்து வந்தது. கோப்பெருஞ் சோழன் வாழ்வில் எதிர் பாராத துன்பம் ஒன்று ஏற்பட்டது. பாற்கடலில் கொடிய நஞ்சு தோன்றியதைப்போல, நல்ல குணங்கள் அமைந்த சோழனுக்கு மிகவும் கொடிய மக்கள் தோன்றினர். தந்தை ஆட்சி புரிவதை அவர்கள் விரும்பவில்லை. எப்படியாவது ஆட்சியைக் கைப் பற்ற வேண்டும் என்ற தீய எண்ணம் கொண்டனர். பொறாமையால் பகை கொண்டனர். தந்தையை எதிர்த்துப் போர் புரியவும் அவர்கள் தயங்கவில்லை.

சோழன் தன் மக்கள் புரியும் இழிசெயல் அறிந் தான். பெருங்கோபம் கொண்டான். அவர்களு டைய கீழ்த்தரமான குணங்களை நினைந்து வருந் தினான். "இப்படிப்பட்ட அற்பப் பிள்ளைகளைப் பெற நான் என்ன பாவம் செய்தேனோ?" என்று கூறி வருந்தினான். "இம்மக்கள் அரசர்களானால் நாட்டு மக்களை எவ்வாறு வருத்துவரோ? புலவர்கள் வாழ்க்கை என்னவாகுமோ? நாடு, கடும்புலி வாழும் காடுபோல் ஆகிவிடுமே?" என்று எண்ணி எண்ணி மனம் வருந்தினான். அவர்களைத் தம் மக்கள் என்று

நினைக்கவும் கூசினன். அவர்களை எதிர்த்துப் போர் செய்யத் துணிந்தான்.

கோப்பெருஞ் சோழனுடைய கொடுஞ் சினத்தால் அவன் குடிமக்களும் நாடும் எப்படிப்பட்ட துன்பத்திற்குள்ளாக வேண்டுமோ? என்று புலவர் புல்லாற்றூர் எயிற்றியனார் சிந்தித்தார். மன்னன் போர் செய்தால் அவனுக்கு அது நீங்காத பழியைத் தரும். புலவர் அரசனைக் காக்க நினைத்தார். அவர் அரசனிடம் சென்றார். அவர், "வெற்றி வேந்தே! நீயும் நின் மக்களும் பகைவரல்லர். நீ உன் புகழை உலகில் நிலைபெறச் செய்து வானுலகம் சென்ற பின்பு உன் மக்களே அரசைப் பெறுவர். மற்றொன்று கேள். நீங்கள் போரிடுங்கால் உன் மக்கள் தோற்றுவிட்டால் இந்த அரசை உனக்குப் பின் யாருக்குக் கொடுப்பாய்? ஒரு வேளை நீயே தோற்றுவிட்டால் உன் நிலைமை என்னவாகும்? உனக்கு அது பெரும் பழியினைத் தரும். எந்த வகையால் பார்த்தாலும் போரிடுதல் இழிவானது. ஆகவே, ஆத்திரம் அடைதல் அழகன்று. போரைக் கைவிடு. மறு வாழ்விற்குரிய நல்வினையைச் செய்வதில் உன் மனத்தைச் செலுத்துக", என்று அவன் ஏற்குமாறு அறவுரை கூறினார். புலவர் கூறிய அறவுரையாகிய நல்ல நீர் மன்னனின் சினமாகிய தீயை அணைத்தது. அவன் அமைதி கொண்டான்; இருந்தாலும் தன் மக்களின் இழி செயல்களை எண்ணி எண்ணி வேதனைப்

பட்டான். உலக வாழ்வு அவனுக்குத் துன்பத்தைத் தந்தது. மக்கள் தன்னை எதிர்க்கத் துணிந்த செயல் மானக் குறைவாக அவனை வருத்திற்று. வாழ்வதை விட மாய்வதே நல்லது எனத் துணிந்தான். ஆட்சியை மக்களிடம் விட்டுவிட்டு உண்ணாதிருந்து உயிர்விட முடிவு செய்தான். அவனுடன் இருந்த புலவர்களும் அவனோடு உயிர் துறக்க நினைத்தனர்.

புலவர்களும் அரசனும் காவிரி ஆற்றங் கரைக்குச் சென்றனர். அவரவர்க்குக் குறிப்பிட்ட இடத்தில் அமர்ந்தனர். அப்போது அரசன் புலவர் களைப் பார்த்து "பாண்டி நாட்டில் பிசிர் என்ற ஊரில் என் சிறந்த நண்பர் பிசிராந்தையார் வாழ் கிறார். அவரும் என்பால் மிகுந்த அன்பு கொண்டவர். நான் நலமாக வாழ்ந்த காலத்தில் வராவிட்டாலும், துன்பமடைந்த இக்காலத்தில் தவறாது வருவார்", என்றான். அதைக் கேட்ட புலவர்கள் வியந்தனர். "பாண்டிய நாடு வெகு தொலைவில் உள்ளது. அப்புலவர் ஒருமுறை கூடச் சோழனைக் கண்ட தில்லை. எப்படி இருவரும் நட்பினர்கள் ஆகலாம்? தன் துன்பத்தில் பங்கு கொள்ளப் புலவர் வருவார் என்ற நம்பிக்கை அரசனுக்குத் தோன்றியது வியப்பே!" என்று நம்பிக்கை இழந்தனர்.

அப்போது கோப்பெருஞ் சோழன் "புலவர் களே ஐயம் வேண்டாம். என் சொற்கள் வீண் போகா. நாங்கள் காணாது நட்புக் கொண்டாலும் எங்கள் நட்பு இந்த நிலம் பிளக்குமாறு இறங்கிய

மரத்தின் வேர்களைப்போல் உறுதியானது. புலவர் இடைவிடாது என் நட்பை நினைத்துக் கொண்டிருப்ப தால் அவர் பெயரைக்கூட மறந்து தம் பெயரைக் 'கோப்பெருஞ் சோழன்' என்றே கூறுவார். அவர் நான் இன்பமாக வாழ்ந்த காலத்தில் வர இயல வில்லை. இப்பொழுது எனக்குற்ற பெரும் துன்பத் தினை உணர்ந்திருப்பார். துன்பத்தில் பங்கு கொள்வது உயிர் நண்பனின் இயல்பன்றோ? எனவே, அவர் தவறாது வருவார். அவருக்கு என் அருகில் இடம் ஒதுக்கி வைக்க", என்று கூறினான். என்ன விந்தை! சற்று நேரத்திற்கெல்லாம் பிசிராந் தையார் அவர்கள் முன் தோன்றினர். புலவர்கள் யாவரும் மெய்ம்மறந்து நின்றனர்.

கோப்பெருஞ் சோழன் பேரரசனாயினும் புலவ ரைச் சென்று காண முடியவில்லை. பிசிராந்தை யார் நெடுவழி வந்து சோழனுடனிருந்து அவன் நட்பினை உணர முடியவில்லை. ஆனால் இருவரும் துன்பமிக்க காலத்தில் ஒருவரை ஒருவர் கண்டனர். இருவரும் தழுவிக் கொண்டனர். ஆனந்தக் கண்ணீர் சொரிந்தனர். அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கோர் எல்லையும் உண்டோ? தன் வாக்குத் தவறாதபடி வந்து சேர்ந்த அப்பைந்தமிழ்ப் புலவரை, உத்தம நண்பரைக் கண்ணாரக் கண்டு மன்னன் மகிழ்ந்தான்.

ஆந்தையாரின் உணர்ச்சி ஒத்த நட்பின் திறத் தைப் புலவர்கள் போற்றினர். "நினைக்கும் போதே

இந்நிகழ்ச்சி சிறப்பைத் தருகிறதே! ஒரு முறை யாவது இவர்கள் இருவரும் பார்த்ததும் இல்லை; பழகியதும் இல்லை. அப்படி யிருந்தும் அரசர் கூறியபடி புலவரும் வந்து சேர்ந்து விட்டாரே! இப்படிப்பட்ட பெரு நட்புரிமை பாராட்டும் சோழனை இந்நாடு இழந்து தவிக்குமே?" என்று ஏங்கினார்கள்.

"பொன் மண்ணுக் கடியில் மறைந்து கிடைக் கிறது. நவமணிகள் மலைகளில் கிடைக்கின்றன. முத்தும் பவளமும் கடல்களுக் கடியிலிருந்து வருகின்றன. வெவ்வேறு இடங்களிலிருந்து வந்தா லும் விலை மதிப்பற்ற இப்பொருட்கள் சிறந்த அணி கலன் செய்யும்பொழுது ஒன்றாக அமைந்து அழகு பெறுகின்றன. அதைப்போலச் சான்றோர்கள் வேறு வேறு நாட்டினர் ஆயினும் ஒருவரை ஒருவர் சார்ந்து வாழ்வர். அல்லாதவர் அவர்களைப் போன்ற கீழ் மக்களையே நாடுவர்", என்ற கருத்தமைந்த பாடலைப் புலவர் ஒருவர் பாடினார்.

புலவர்கள் யாவரும் பிசிராந்தையாருடன் பேசி மகிழ்ந்தனர். ஆண்டுகள் பலவாகியும் அவர் இளமை யோடு காணப்படுவதன் காரணத்தை அறிய விரும் பினர். அவரும் தம் கவலையற்ற வாழ்க்கையைப் பற்றிக் கூறினார். பின்னர் யாவரும் வடக்குத் திசை நோக்கி அமர்ந்தனர். வடக்கிருக்கும் பேறு கிடைக் காத புலவர் பொத்தியார், பிசிராந்தையாரது நட்பின் சிறப்பை எண்ணி எண்ணி வியந்தார்.

அவர்கள் உயிர் துறந்த இடத்தில் வீரக்கல் நட்டனர். அவற்றிற்கு முறைப்படி வழிபாடு நடத்தினர்.

இவ்வாறு ஒருவரை ஒருவர் காணாமலும், பழகி உறவாடாமலும் கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையாரும் நட்புக் கொண்டனர். அது மனம் பொருந்திய நட்பு. நட்பினர்க்கு எடுத்துக் காட்டாக விளங்குபவர்கள் அவர்களே யாவர். தமிழ்ப் பாடல்கள் உள்ளவரை அவர்களின் புகழும் நிலைத்திருக்கும்.

---

## பயிற்சி வினுக்கள்

I 1. பெருஞ்சித்திரனர் குமணவள்ளலைச் சந்தித்த நிகழ்ச்சியைக் கூறுக.

2. இளங்குமணன் எவ்வாறு மனந்திருந்தினுன் ?

II 3. மதியழகனும் வெற்றிவேலனும் தாய்க் கரடியை எவ்வாறு கொன்றனர் ?

III 4. தாமஸ் ஆல்வா எடிசனுடைய இளமைப் பருவமும், கல்வியும் என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை வரைக.

5. எடிசன் தந்தியனுப்பும் முறைகளில் என் னென்ன புதுமைகளைக் கண்டார் ?

6. எடிசன் கண்டுபிடித்த விஞ்ஞானக் கருவி கள் யாவை ?

IV 7. முத்து, தன் ஊரைவிட்டு வெளிநாடு சென்றதேன் ?

8. முத்துவின் பேராசையையும் அதனுல் ஏற்பட்ட முடிவையும் பற்றிக் கூறுக.

V 9. போர்ஷியாவின் திருமணம் எவ்வாறு நடை பெற்றது ?

10. அந்தோனியோவைக் கொல்லத் திட்டமிட்ட ஷைலக் எவ்வாறு தோற்ருன் ?

11. தன் மக்கள் மீது போர் தொடுக்கச் சென்ற மன்னனைப் புலவர் எவ்வாறு தடுத்தார் ?

12. பிசிராந்தையாரும் கோப்பெருஞ்சோழனும் ஏன் சிறந்த நட்பினர் என்று கூறப் பெறுகின்றனர் ?

